உ

கணபதி துணை.

# பெருந்தோட்டத்து

# அத்ரீச்சுரபுராணம்.

இஃது

## ஸ்ரீ வன்றொண்டரவர்கள்

மாணாக்கருளொருவராகிய

காரைக்குடி

ராம. சொ. சொக்கலிங்கச்செட்டியாரவர்களால்

இயற்றப்பெற்று

ஷையார் மாணாக்கருளொருவராகிய

ஷையூர்

ராம. உ. ராமசாமி செட்டியாரால்

ஷையூர்

"ஞானம்பிகா" ப்ரிண்டிங் வொர்க்ஸில்

அச்சிடப்பெற்றது.

பிங்கள-௵ ஆடி-௴

1917.

உ

# குறிப்பு.

—•○∞○•—

இத்திருப் பெருந்தோட்டத்து அக்கீச்சுரமென்னுஞ் சிவக்ஷேத்திரம், ஸ்ரீவாகீசத் திருவடிகள் திருவாய்மலர்ந்தருளிய பொதுத்திருப்பதிகங்களிலொன்றாகிய அடைவுதிருத்தாண்டகத்திருப்பதிகத்தில் எட்டாவது திருவிருத்தமாகிய,

நாடகமாடிட நந்திகேச்சுர மாகாளேச்சுர நாகேச்சுர நாகளேச் சுரநன்கான
கோடீச்சுரங்கொண்டீச்சுரந் திண்டீச்சுரங்குக்குடேச்சுரமக்கீச் சுரங்கூறுங்கா
லாடகேச்சுர மகத்தீச்சுர மயனீச்சுர மத்தீச்சுரஞ் சித்தீச்சுர மந்தண்கான
லீடுதிரையிராமேச்சுர மென்றென்றேத்தி யிறைவனுறை சுரம்பலவுமியம்பு
வோமே.

என்னுந் திருப்பாசுரத்திலே, நந்தீச்சுர முதற் பன்னிரண்டு திருத்தலங்களுக்கு மேலிருத்தலால், இது, துவாதசாந்த ஸ்தலமாகிய மதுராபுரியோவென்றுலகெலாம் வியந்து பாராட்டும்படி விளங்குகின்றது.

இத்தலம், காசிதுல்லியமென்பது உபசாரமாகாமல், மணிகர்ணிகைத்தீர்த்தமுடையிருத்தலாதிகளானும் உண்மையென்றே விளங்குகின்றது. இக்க்ஷேத்ரம் காசியாகிய திருவெண்காட்டினது எண்டிசைகளுட் சிறந்த ஈசானதிசையில் ஒருகுரோச தூரத்திலுள்ளது. திருவெண்காட்டின் பஞ்சக்குரோச ஸ்தலங்களுள்ளுஞ் சிறந்ததாய்த் திருவெண்காடுடைநாதர் இங்கெழுந்தருளித் தீர்த்தோற்சவங்கொண்டருளுகின்ற திவ்விய மகிமையையுடையது.

இத்தலத்திலுள்ள கார்காத்தவேளாண்மரபினரில், கல்வியறிவொழுக்கங்களுலிங்கசங்கமபக்தியிற்சிறந்த சிவபூசகராகிய துரைச்சாமிபிள்ளையவர்கள், எனது ஆசிரியராகிய ஸ்ரீ சொக்கலிங்கதேசிகரவர்களிடத்தில், இத்தலபுராணத்தை வடமொழியினின்றுந் தமிழ்மொழிபெயர்த்துச் செய்யுள்வடிவாக்கித்தரல்வேண்டுமென்று மிகுந்த ஆசையையுடையராய்விரைவுகாட்டினர். அவர்விரைவுக்குறிப்பு நோக்கித் திருவருளை முன்னிட்டுத் தமது சிவபூஜாதி நியமங்களினின்று மிஞ்சிய நேரமாத்திரையே கொண்டு ஒருமாசத்துக்குள் முடித்துக் கொடுத்தார்கள். அங்ஙனமாகவும், இப்புராணத்தை அச்சிடுவிக்கும்படி கேட்டுக்கொண்ட ஷெ பிள்ளையவர்களுக்குச் சம்மதங்கொடுத்தவராற் காலதாமசமாகி வருஷமூன்றுகழிந்தமையால், அவர்சாவகாசமின்னும் நோக்கி இதனை லோகோபகாரமாக வெளியிடாமல் மேலுந் தாமசமாகவைப்பது நன்மையன்றெனக்கருதியே ஈண்டு இச்சிவபுராணத்தை அச்சிடுவித்தேன்.

இங்ஙனம், ராம. உ. ராம.

நூலாசிரியர் மாணவர்

# சிறப்புப் பாயிரம்.

தேவிகோட்டை

## வெ. ஆந்தி. மா. சிதம்பரச் செட்டியாரவர்கள்.

இயற்றியது.

---

பொன்பூத்த நிறச்சடிலர் புழைபூத்த கரச்சுமுகர் புராண போதர்
மண்பூத்த விநாயகனார் மலர்பூத்த வடிப்பரிச மகிமை வாய்ந்து
கொண்பூத்த தமிழ்முனிகைக் குளிர்பூத்த குண்டிகையிற் குலாவிச் சையத்
தெண்பூத்த வரையுதித்துத் திசைபூத்த விசைப்பொன்னிச் சென்னிநாட்டில்

தொன்மைபெறு சுத்தாதது விதசைவ சித்தாந்தத் துறைப்பு குத்தி
நம்மையெலா முய்விக்க வடமொழியின் மெய்சிவ ஞான போதச் [செய்த
செம்மைபெறுங் கதநூலைத் தமிழ்மொழியின் மொழிபெயர்த்துத் தியாகஞ்
திண்மைபெறு மெய்கண்ட சிவாசாரி யாருதித்த சிறப்பின் பொம்மல் (உ).

முக்குளநீர் மூவர்தமிழ் முன்னுளவென் காட்டிலைக்கு மொழியிற் சாரு
திக்கதனிற் றிகழ்பதியாய்த் தேவார வைப்புளொன்றாய்ச் செநநியான
மிக்கருளாப் பிலாமுலையாம் விமலையுட னத்தீசர் மேவி வாழ்சீர் [ன்மை
தொக்கபெருந் தோட்டமெனத் தொல்லுலகில் வழங்குமத்தீச் சுரத்தின் மே
[யேற்

வடமொழியின் மெய்யதனைத் தென்மொழியின் மொழிபெயர்த்து வழங்கு வா
றிடமுறக்கற் றுய்யவென் றங்கர்வாழ் சிவனன்பர் செப்பக்கேட்டுக்
குடமுனியுங் கலைமகளு மதிசயிப்பக் குற்றமறக் குணங்கண் மல்கப் [தான்
புடமுயர்செம் பொன்னேபுத் தமுதோவென் றுலகுவப்பப் புராணஞ் செய்

மற்றவனியா ரெனிற்பாண்டி வளநாட்டிற் காரைநகர் மன்னி வாழுங்
குற்றமிலா வசியகுலத் திராமநா தக்குரிசில் குயிற்று மேலை
நற்றவத்தா லுற்றபொருள் வன்றொண்டர் மாணாக்கன் ஞான நூல்கள் [ன்
கற்றுணர்ந்தும் நெறிநிற்போன் கவின்செயிலக் கணமைந்துங் கைவந்துள்ளா

பாலருமோர்ந் தெளிதுயுமா பொதுவேத நெறிச்சார பால பாட
மேலசிவா கமத்துறைமே விளக்குசைவ வினாவிடைமுன் வியனூ றந்துஞ்
சிலவருட் செயன்மேலுஞ் செயற்கரிய செய்வரென றிகழ்த்துஞ் சீர்த்தி
ஞாலமலி யாறுமுக நாவலர்கோன் றிருவடிக்கு நவிற்றுந் தொண்டன். (சு)

விஞ்சையஞா னம்மிலக்கு நிருவாண தீக்கைபெற்ற விமலன் றனைப்
பஞ்சசுத்தி செய்துதினம் பாவிப்போன் பிள்ளையார் பட்டி யென்னுங்
குஞ்சரவ தனப்பெருமான் கோயிலினன் மாணவருட் கொள்ள நூலோ
தஞ்சலியாப் புகழ்படைத்தோன் சொக்கலிங்க தேசிகனாந் தூயன் மாதோ.

---

நடேசர்.

பரவுநடம் பகர்பொதுநூற் பரதமுமாம் பதியேமெய்ப் பதியென்றம்ம, விரவுநம முத்திரையால் விளம்பிநமசேடியமென் மெய்ந்நூல் வாய்மை, யுரைவிளக்க வதற்கிலக்கா மொருவனுயிர்க் கைந்தொழில்செய் துய்விப்பான்பொன், வரை புரைமன்றகத்தசையாதருணடஞ்செய் குஞ்சிதத்தாள் வழுத்திவாழ்வாம். (எ)

சிவகாமியம்மையார். (வேறு.)

துடியினி லமைப்பி லங்கிச் சுடரிலூன் றியவெடுத்த
வடியினி லெழுத்தைந் தாக வைந்தெழுத் திலங்கச் செய்யுங்
கொடியினி லேறு யர்த்தோன் கூத்துக்கண் டுயர்நோய் நீங்க
மடியினிற் சேயிதேனும்பு மன்னைதாள் சென்னி வைப்பாம் (அ)

சோமாஸ்கந்தர். (வேறு.)

அத்தனருட் சிவனேசத் தவனிடப்பா லுமாம்பிகையே
சித்திவர்யோ கத்தின்பே திகழ்கந்த னெனுமுண்மை
சத்துசித்தா னந்தபதந் தனிதேர்ந்த னேர்விளக்கு
மெய்த்தருசோ மாக்கந்தர் விரைமலர்ச்சே வடிபணிவாம். (கூ)

தக்ஷிணாமூர்த்தி. (வேறு.)

கைவிரனுன் கொருசேரப் பெருவிரலவே ருயுயிர்தன் கழல்சேராத
வெவ்விபமும் மலச்சார்பு விளக்கவவை விலக்கிவணம் கென்னு மெய்ந்நூற்
செவ்விதெரித் திருவரன்முன் பின்வரைத்து முத்திநிலை தேற்றி யாளுந்
திவ்வியசின் முத்திரைப்பூஞ் செங்கரத்தான்பங்கயத்தாள்சென்னிசேர்ப்பாம்

வாதாடு விநாயகர். (வேறு.)

மாதானத் தமரர் வேந்து மாதான வெள்ளி பத்தை
நீதாவிங் கடிய னேற்கு நீதாவென் றிரந்து வேண்ட
வாதாடி யருள்பு ரிந்த வாதாடு விநாய கன்பொற்
பாதார விந்த மேதப் பாதார வுளங்கொண் டுய்வாம். (கக)

முருகக்கடவுள். (வேறு.)

அமர நாயக நலனுமி லேனையும் மடிமைத்
தமர னாயக னிரங்கியாட் கொண்டநந் தலைவன்
சமர னாயகன் மனத்தவன் சூர்முத றடிந்த
குமர நாயகன் சேவடித் துணைமலர் குறிப்பாம். (கஉ)

திருநந்திதேவர். (வேறு.)

முன்னவ னாணை சென்னியிற் கொண்டு முன்புகப் பெறுப்புறந் தவருட்
பின்னுறுங் காப்புஞ் சிவாகமந் தெளிவுந் தூச்சிவ ஞானபோ தகநூ
லின்னுப தேச முளங்கொடெம் மவர்சட் கிசைத்துயர் சைவத்துட் புகுத்து
மன்னகக் காப்பும் வகித்தரு ணந்தி மலர்க்கழன் மலக்கழ லாமே. (கங)

துர்க்காதேவி. (வேறு.)

உமைத ணாருட் சத்தியே வடிவுகொண் டுலகத்
தமர ராதியர்க் கிடர்புரி மகிடனை யட்டாள்

திமிர்சி ரத்தடி யூன்றிநின் றன்புமிக் கிறைஞ்ச
நமர்க ளுய்யநற் பயன்றரு கன்னிதா ணமப்பாம். (கஎ)

வயிரவர்.

அயன கந்தவிர்த் தருளுற வகிரிஞ லவன்றன்
வியன கந்தனைக் கிள்ளியக் கபாலத்தின் மிசைவெண்
பய † ன கந்தனிப் பள்ளிமால் சோணிதப் பயிக்கம்
பெயன கந்தணம் வயிரவற் பணிகுதும் பேணி. (கஅ)

இலக்குமி சரஸ்வதி ஞானசத்தி. (வேறு.)

திருவரு ளருக்கொண் டுலகுயிர்யாவுந் திருவுயிர்த் தருளுமா தேவி
பொருளுமெய்ப் பொருளு ஞானமுந் தருமப் புனிதமு நயனநோக் கெய்தி
வருமபருஞ் செல்வி வாணிமெய்ஞ் ஞான மாதெனு மூவர்பொன் மலர்த்தா
ளொருமையினிருமை மும்மையினிறைஞ்சியுறத்துதித் துன்னிவாழ் வுறுவாம்

ஆளுடைய பிள்ளையார். (வேறு.)

தன்னைச் சேர்ந்த தாத்தாலோர் தைய லுருவென் படலையதா
முன்னைச் சேர்ந்த மால்வெள்ள முதல்வன் கபாலீ சன்கோயி
றன்னைச் சேர்ந்த நாட்குடத்திற் சாரென் படலை பெண்மணி யாய்
முன்னைச் சேர்ந்துய் யுறவளித்தோன் முளரித் துணையெம் முடிக்கணியாம்

ஆளுடையவரசு.

கல்லை வகித்திடெனவருணன் கழல்பூ சித்து வரங்கிடந்தாங்
கொல்லை யடிக்கி நெறியாக்கி யுததி கடந்த மால்வெள்கக்
கல்லை மிதக்க முயலாது கடந்தேழ் பிறவிக் கடல்கடப்பித்
தொல்லை யடிக்கீ ழெமைப்புகுத்து மொருவன் கமல முளக்கமலம்

ஆளுடையநம்பி.

எந்தை யருளா லாழியிற்கா லீர்த்த கராங்கொண் டிரந்தழைத்த
தந்த வேழ மோம்பியமால் சமழ்ப்ப வாவி நீர்முதலை
வந்து தோன்ற விழுங்கியசேய் வளர்ந்து தோன்ற வழுதொழுது
கந்த மலர்வாய் மலர்ந்தருணங் கண்ணின் மணியை யுண்ணினைவாம். (ககூ)

ஆளுடைய வடிகள்.

வேத சிரசிற் சுத்தாத்து விதரா சாங்கத் தமர்சைவ
போதம் விலக்கிப் புத்தநெறிப் புகுத்து சிவத்து ரோகங்கொண்
டேத முறுமா றுட்கவஃ திரித்துச் சைவ நெறிபரப்பி
வேத மொழிமூ கந்தரச்செய் விமலன் கமலத் துணைவிழைவாம். (உ௦)

திருத்தொண்டத் தொகைபடியார். (வேறு.)

நவந்தரு பேத மாகி நடித்தருள் நாதனெங்கள்
சிவன்றனி வருக்கத் தாரித் திருத்தொண்ட ரென்னும் வாய்மை
யிவர்ந்தவே ழொன்பா னொண்ணென் பானெனு மெண்ணுங் காட்ட
நிவந்தசீர்த் தொண்டர் பாத நெஞ்சினு ளிருத்தி வாழ்வாம். (உக)

† நகம்- குறுக்கல் விகாரம்.

### சேக்கிழார்.

சீரண பாயன் கேள்வி மூன்றிற்குஞ் சிறுபி ராயத்
தேரனு யாசத் தோதி யிறைமகிழ்ந் தேற்பச் சென்றக்
காரனை யானை யுய்வித் தாட்கொளுங் கருணை ஞான
வீரனைக் குன்றைச் சைவ வேந்தனைச் சேர்ந்து வாழ்வாம். (உஉ)

### மெய்கண்டசிவாசாரியர். (வேறு.)

அருளே மறையே புரிந்தாவி யளிக்குங் குகனே யம்மறைநீத்
தருளே புரிவான் காழியில்வந் தருள்கா லமுணர் தம்வாயா
லருளே தின்றி யழிந்தமையி னதுவுமிலதா வெண்ணெயில்வந்
தருளே புரியு மெய்கண்டா னமலக் கமலத் தாளடைவாம். (உ௩)

### அருணந்திசிவாசாரியர்.

சகலா கமபண் டிதரெனுங்கா ரணப்பேர் தாங்கித் தமையடைந்தாங்
கலா வாறெண் மர்க்கதிப ராயு மடுத்தா ணவம்வினவிப்
புகலா மெய்கண் டான்பதமே பூண்ட தலைமை யருணந்தி
நிகமா கமசி வாசிரியர் நிழல்வண் கழல்க ணினைந் துய்வாம். (உ௪)

### மறைஞானசம்பந்தசிவாசாரியர்.

அத்த னருளா லருணந்தி யடிக ளடைந்தாங் குமாபதிக்குச்
செத்த கட்டை யூர்ந்துபகற் குருடு செல்கின் றதுவெனத்தேற்
றொத்த வுரையே திருமந்தி ரோப தேச மாகவருள்
சுத்த னமலன் மறைஞான சம்பந் தாசான் றாடொழுவாம். (உ௫)

### உமாபதிசிவாசாரியர்.

நிலவு திருக்கை யொழுகமுத நிகம ஞான சம்பந்தன்
குலவு மருளா லாட்கொண்டு கொற்றன் குடிவீற் றிருந்தருளம்
பலவன் பணிவு காட்டியருள் பாக்கொண் டனைய சாம்பானுக்
குலவின் முத்தி யளித்தவுமா பதிபொற் றாளெம் முளத்தமைப்பாம். (உ௬)

### பட்டினத்தடிகள் அரநந்தாசாரியர். (வேறு.)

பல்லுயிர் களுக்குந் தந்தையாய் மகவாப் பவித்திடாப் பரன்ம கவாகி
யல்லொழித் தெண்ணீ ராண்டமர்ந் தருள்வா னருந்தவம்புரிந்த வெண்காடர்
கல்லுரு நந்தி புல்லுண வூட்டிக் கவின்சிவ நாமத்தின் பெருமை
சொல்லுல கெல்லாம் விளக்கர நந்தர் தூயசே வடித்துணை தொழுவாம்.

### சேந்தமிழ்ப்பரமாசாரியர். (வேறு.)

தமிழே யாண்டு முயிர்க்கிதமன் றருவதலது கற்கசத்தா
லமிழ்தே வரினும் பின்முனித மன்றால் யாரும் யாவும் விழை
தமிழே யாண்டும் பரவுகெனத் தந்தாங் கனைய வியலெனுமா
ரமிழ்தே யருளு மகத்தியப்பே ராசா னடிகண் முடிக்கணிவாம் (உஅ)

## குருவணக்கம். (வேறு.)

பலபலமுறையினுணர்த்தினுமுணராப்பான்மையேன்றனையுமாட்கொண்டு
வலிதினா லுணர்த்த வன்றொண்ட மணியை வரதமெய் யப்பமா மணியை
மலமுழு தொழித்தா ளாறுமா முகநா வலகுரு சிகாமணி யென்றே
யுலகெலாம்பரவுமொருகுருமணியையுளத்தினுஞ்சிரத்தும்வைத்துவப்பாம்.

கடவுள் வணக்க முற்றிற்று.

---

## பாயிரம்.

சிவனருள் வாக்கி னூற்றெழுந் துயர்நந் தித்தடத் திற்சனற் குமாரத்
திவள்பெருங் காலிற் செல்லுபு வியாசத் திண்மத கிற்புகூச் சூதத்
தவ்ன்மடை நெறியா லுயிர்ப்பயிர் ஞானத் தண்பலம் பல்குற வுளமா
மவிர்தரு நிலம்புக் குலகெலாம் புரக்கு மணியநீர்ப் புராணமு வாறே. (க)

பரனுலகவர்க்குப்பொதுவெனமுதலிற்பகர்ந்தநான்மறைப்பொருள்பலவாய்
விரிபுகற் கசரூத் திரவடி வாகி விரவலி னுண்மையோர் வரிதவ், வருமறை
வாய்மை துணிந்துல குய்வா னதற்குபப் பிருங்கண மாய்நின், ஞெருவின்
மெய் விளக்க லாற்சிறப் புடைமை யொளிருமிப் புராணங்கட் குரைப்ப(உ)

வேறு.

அனைய வொன்பதிற் றிரட்டியாம் புராணத்து ளரிசி
ரினிது ரைப்பது நான்கயன் சீர்சொலு மிரண்டே
வனியின் மாக்கதை யொன்றுவிண் மணியின் மாண் பொன்றே
புனித நீள்சில புராணமீ ரைந்தெனப் புகல்ப. (ங)

இன்ன வைந்திரு புராணத்து ளிலக்கமாங் கிரந்த
மன்னி யாவரு மதிப்பருங் காந்தமா புராணந்
தன்னின் மூவிரு சங்கிதை தமின்முதற் றகைத்தாய்ச்
சொன்ன தங்கரன் சங்கர தூங்கசங் கிதையே. (ச)

இத்த குஞ்சிவ சங்கர சங்கிதை யிடத்தே
மைத்த கண்டனெம் பசுபதி மறைபுகல் கண்டன்
சித்த கண்டனெம் மானயி ராவதே சன்சீர்
மெய்த்த கண்டன் வாழ் பிரகதுத் தியான மான்மியமே. (ரு)

இனிதி லங்குமச் சிவபுரன் மான்மிய மிம்பர்
மனி விளங்கிட வடமொழிக் கடலினும் வரூஉக்
கனிசி றந்ததேன் கண்டுபாற் சுவையினுங் கூவிஞர்
நனியு கந்தசெந் தமிழினிற் றருகென நவின்றான். (சு)

இத்த லந்திலோர் குரிசில்யா ரெனிற்சிவ னன்பே
நித்த மிக்குளா னேர்யளந் தோக்குளா னினையுஞ்
சித்த நெக்குளான் வாசமெண் டிக்குளா னிதழிக்
கொத்த லர்ச்சடை யினிற்றிகழ் கங்கையின் குலத்தான் (எ)

திங்கள் வேணியன் சிவார்ச்சனை நியதியிற் சிறந்தோ
னொங்கி யற்றமிழ் நூல்பல தெளிதர வுணர்ந்தோன்
றங்கள் வங்கிய வழிக்கிலை சைவசித் தாந்தி
துங்க மார்துரைச் சாமியென் றுரைபெயர்த் தோன்றல். (அ)

அவனு ரைப்படி மருதுசெய் வழியக மமலன்
சிவனு தற்கணன் வாய்மைமான் மியஞ்சொலுந் திறத்தாற்
றவமி குத்தழுக் ககற்றுபு தூய்மையே தந்து
பவமி ரித்தருண் மௌனமனம் பற்றினே னெனினும். (க)

அவையடக்கம்.

அவையடக்க மாமரபென் றதுபுரிந்த வான்றோர்த மாணை பேணி
யவையடக்கம் பின்னுரைத்தா ரதன்மகிமை யறிந்துடன்சா ரறிஞர் பல்லோ
ரவையடற்கீ ரறியேனா லாற்றுதற்கோ ரறிவுமிலே னாதலாலே
யவையடக்கம் புகன்றிடுகோவதுவிடுகோ வுளாந்துணியா தஞ்சி னேனே (௧௦)

ஆயினுமோர் படிதுணிந்தே னணிமணிவா சகப்பெருமா னன்று னென்னைக்
கூயருளா விடினுமொறுத் தாவொன்றும் போதுமெனக் கூறி யாங்குத்
தூயறிஞ ரின்னூலிற் சொற்குற்றமுடையா திப்பிழுது சொற்றா ரேனுந்
தீயன நீத்தெனைத்திருத்தித் திருவருட்கே சேர்ப்பரெனுந் திடத்தி னாலே.

அன்றிடையாரிகழ்ந்தாலென்புகழ்ந்தாலென்னடியேற்கொன்றாவதின்று,
மன்றுடையான்றிருவருளைவாய்ப்புடையார் காப்புடையார் மலர்ப்பாதங்கள்,
சென்றுடையீரருள்கவெனத்தெளிந்திரத்தலென்னியல்பாற்சிவஞானச்சீர்த்
தொன்றுடையார்யாவருக்குந்துவணக்கஞ்செய்தனன்மேற்றொடங்கினே
[னே.

தொடங்கியவிந் நூற்பெயா நுலகுசாம் பிகைபாக சுந்த ரேச
னிடங்கொடுவீற் றிருந்தருளும் பெருந்தோட்டத் தத்தீச புராணமென்க
தடங்கொளிதன் றொகை கட்வு டம்வாழ்த்துப் பாயிரமே சாற்றுநாடு
திடங்கொடிரு நகர்ச்சிறை மிசச்சிறப்புத் திருத்தலமே தீர்த்தமூர்த்தி. (௧௧)

இந்திரசுந் தரசருக்க மிலங்கயிரா வதசருக்க மியோகாசதன்
வந்தனைசெய் மாண்புகலா வதிசருக்கந் திருநீற்று மாண்ச ருக்கந்
தந்திரமோர் மூகைகவி சருக்கம்வா ரணேசசரு க்கந்தா னென்க
விந்திதழி முடியருளி னிருநான்கேழ் வகையாகி யிலங்குமன்றே. (௧௨)

இன்னவகை பதினைந்து மின்றமிழின் விருத்தப்பா வெழுநூற் றின்மேற்
றுன்னியதொண் ணூற்றொன்றாய்ந் துலங்கியசொற் றேன்ஞானசுகுணசீலர்
மன்னருளொப் பிலாமுலைபான் மருவியீற் றிருந்தருளும் வள்ளன் மாண்பே
நன்னருளாத் துறநோக்கி நகைச்சுவைமிக் குறுவரென நயப்பான் மனதோ.

தற்சிறப்புப் பாயிரம். (வேறு.)

ஆய முதல்வன் பெருந்தோட்டத் தத்தீச் சுரமான் மியமுலகம்
பாய வன்பிற் கொண்டுவப்பான் பரிவிற் புரிந்தான் றேவைநகர்
மேய புனித வன்றொண்ட விமல குரவன் மாணாக்கன்
றூய காரை நகர்வாழுஞ் சொக்க லிங்க தேசிகனே. (கஅ)

பாயிரம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் (சரு)

---

## திருநாட்டுச் சருக்கம்.

### பொதுவளம்.

மணிகொண்ட திருமார்பன் முதலாய வமரரெலாம் வந்து வந்தெம்
பணிகொண்டிங் கருளுகெனப் பரவுதிருக் கோயின்முதற் பதிகளோங்குந்
திணிகொண்ட பூவுலகிற் றிருவளங்க ளெவற்றினுஞ் சிறந்த தென்றே
றுணிகொண்டு புலவரெலாந் துதிவாய்மை நேர்காட்டுஞ் சோழ நாடு. (க)

உம்பரார்க் கும்மருஞ்சோ றுலகொளாஅம் பெற்றுலகெ லாமுய் காதை,
யன்பினு லருள்சேக்கி ழாரமைச்சாய்ப் போற்றுறுமாண் பார்ந்த தொன்றே
நம்பிரா னயந்தாண்ட நம்பிபெரு நம்பியென நமக்கு நன்மை [சோணாடு.
யெம்பிரான் குலச்சிறைமுன் னியற்றமைச்சின் மாண்புமுடைத் தெழிற்

வேறு.

தாருக வனத்தின் முன்னாட் டனிப்பெருங் கூத்தி யற்றும
போருக குஞ்சி தத்தாட் புனிதனுந் தன்பால் வந்து
பேருகங் களினு மாறாப் பெற்றியி னின்றெஞ் ஞான்றுஞ்
சீருகந் தின்புற் றாடச் செய்வதித் தெய்வ நாடு. (ங)

வேறு.

பூமியிற் புனித பூமிமே லதன்மேற் புண்ணியத் தைவிக மதன்மேற்
றேமலி யதன்மேல் விண்டுகேத் திரமத் திருப்பதி சைவகேத் திரமே
லாமவற் றதிகந் தமிழ்மறைத் தலமென் றறைவராத் திராவிட சுருதிப்
பாமரு தலங்கண் மற்றவற் றதிகப் பண்பதிச் செம்பியர் நாடு. (ச)

வேறு.

சேர சோழ பாண்டிநாடு தொண்டை துளுவங் கொங்குதீசி
யீழநா டொன் பானிடத்து மிருநூற் றெழுபா னான்காகும்
வாழி மூவர் தமிழ்ச்சுருதி மன்னு தலங்கண் மற்றவற்றுட்
சூழ விளங்கு மொருநூற்றுத் தொண்ணூ றுடைத்தோர் சோணாடே. (ரு)

முன்னம் பலவர் திருவருளின் முறையான் மறைசீர்ப் பதிகமெலாம்
பண்ணுந் தலம்பல் லாயிரமேற் பல்கு மளவோ கோவையுறத்
துன்னும் பதிகத் தலமத்தீச் சுரஞ்சார் பெருந்தோட் டம்முதலா
மன்னுந் தலமு மளப்பின்றி வயங்குஞ் சீர்த்தில் வளநாடு. (௬)

வேறு.

திருமுறை கண்ட சோழர் திருமகற் றேர்க்கா லூர்ந்த
வருமுறை நீதிச் சோழ ரனபாய ராதிச் சோழர்
பெருமுறைத் தெய்வச் செங்கோல் பிஞ்ஞக னருள்வி ளக்கந்
தருமுறைச் சைவ மோங்கத் தழைப்பதிச் சென்னி நாடு. (௭)

தமிழ்மறை தந்த செல்வர் தாம்பல நாடுஞ் சார்ந்தத்
தமிழ்மறை தந்தா ரேனுந் தன்னிடை முழுதும் வைத்தே
தமிழ்மகி ழிறைகை யொப்பஞ் சார்தர வெளியிட் டெல்லாத்
தமிழ்மறைத் தலமுஞ் சீர்ப்பத் தந்ததில் வந்தண் ணாடு. (௮)

பொன்னிமா நதியின் சார்பாற் பொன்னிநா டென்ப தொன்றோ
பொன்னெலாம் புவன மெல்லாம் பொருவறப் பொலித லானும்
பொன்னிநா டரிநி றத்தும் பூவினும் விழைந்தெஞ் ஞான்றும்
பொன்னிவா சத்தி னானும் பொன்னிநா டின்ன நாடு. (௯)

இப்புவி நாட்டிற் செல்லா மிடையமர்ந் துயிரீ தென்னு
மப்பரி சறலோர்ந் தந்நா டனைத்துந்தன் சென்னி மேற்கொ
டிப்பிய மகிமை வாய்ந்த திண்மையாற் சென்னி நாடென்
றெப்புவ னங்க ளும்போற் றிருஞ்சிறப் புடைத்திந் நாடு (௧௦)

எத்திசை நோக்கி னுங்கட் கிதமுஞ்செய் பைங்கூ ழீட்ட
நித்திய நதிக ளோட்ட நிறைமலர்ப் பொழில்க ளீட்டஞ்
சத்தியப் பொருட்டே வாரஞ் சாற்றுநந் தேவ கோட்ட
மெத்திய பொலிவு காட்ட விளங்குமிவ் வளங்கொணாடு. (௧௧)

தேட்டமன் சீவா தாரஞ் சீவன மதனை லேனை
நாட்டக நாணச் சீவ நதிகள்பற் பலவெஞ் ஞான்று
மோட்டமன் னுயிர்நி லைப்பண் புற்றிடு குறிகொ லென்ன
வீட்டமன் னீர்நா டென்பே ரெங்கணுந் திகழ்மிந் நாடு. (௧௨)

எங்கணுங் கழனி மல்கு மெங்கணுந் தழனி பல்கு
மெங்கணு நெற்போர் நல்கு மெங்கணும் பொற்பே புல்கு
மெங்கணும் பாவ னங்க ளெங்கணும் பாவ னங்க
ளெங்கணும் பாவ னங்க ளெங்கணும் பாவ னங்கள். (௧௩)

எங்கணு மருவி போந் தெங்கணு மருவி நீடு
மெங்கணும் பன்ன சாலை யெங்கணு மன்ன சாலை
யெங்கணு முழுவ ரார்க்க மெங்கணு முழுவ ராக்க
மெங்கணு மான்கோட் டங்க ளெங்கணு மான்கோட் டங்கள். (௧௪)

மலைவளம் பரவு முல்லை மலிவளம் விரவும் பண்ணைத்
தலைவளம் பொலியு நெய்தற் றுறைவள மலியு மோதுங்
கலைவள முழுங்குஞ் சைவக் கவின்வளந் தழுங்கு ஞான
நிலைவளம் பேரின் பூட்டு நிறைவள நீர்நா டெங்கும். (௧௫)

போற்றுமிப் பெருஞ்சீர் நாட்டுப் பொருவளம் விரித்துக் கூறு
மாற்றலின் றெனக்கின் றென்பா ரறைகமற் றதற்கு நானே
னேற்றுமுற் றிசைக்கப் பெற்றே னெந்தைகை போர்க்கு முற்றே
மேற்றுணை மழைச்சீ ராந் தெரிந்தவா விளம்ப லுற்றேன். (௧௬)

மழைவளம்.

வானிறச் சத்தா வான்ற மாறுற வானி லேகி
நீனிற வுவரி யுண்டங் கிலையுயிர் தமைச நித்தாற்
போனிற மாகி றத்தாய்ப் போந்திரா சதஞ்சார்ந் தாங்குத்
தானிறஞ் சேந்த சம்பை சார்ந்துவிண் படர்ந்த கொண்டல். (௧௭)

படர்முகி லிலையில் செவ்வைப் பற்றின ரகத்தை கூறு
மடமைத குணத்தி னீந்து மாண்பினர் முன்பொற் சையந்
தடவரை சார்ந்தன் றேயு தகங்கயுன் றனைமந்து பண்டைத்
தொடர்மலங் கழுவு நாய்மை தன்னுயி ரென்ன மன்னும். (௧௮)

மலைச்சிரஞ் சார்கீ ழேத மலினமற் றெளிர்த லென்பார்
மலைத்தனக் கருபன் முன்னை மாகசீர்ந் தொளிர்தன் மாறு
மலைக்கொண்சீர் முற்றும் பெற்பிற் கனித்தனே தாங் கருச்சிப் போர்க
ளலைக்கொடற் போத முற்று மாற்கிளி தளிந்தன் மாறும். (௧௯)

சென்னியிர் சைய பெற்பிற் செல்லுங்கா லிறுமாந் தெய்தி
யன்னதை நயடுத்துப் பெய்தாங் கமைந்தா வீழ்ந் திலங்கு தோற்ற
மின்னருஞ் மெய்ஞ்ஞா னாண்பா லெய்தரு ணெந்தி யாணை
வந்திலை விறுயடிக்கீழ் வணங்கிப நிலைமை காட்டும். (௨௦)

மேகத்தின் றாங்கீர் சைய மேனிப்பல் லருவி யாவென்
றாகித்தால் லுலகம் போற்ற வாங்கற வருமறைக்கு
மேகத்தன் றன்பாற் சத்தி யிமைப்பிற்பல் லுருவா யாவி
சோகத்தை நீக்கி யுய்வான் றோன்றுதல் போலு மன்றே. (௨௧)

வேறு.

சைய கிரியின் றெழுகருவி தளவத் தொடைய னிரைபுரையு
முய்ய வியலா தூடெழுகே ணக்க ளொலியண் டினமுறழும்
பைய மயில்க ளமர்வேங்கை பாவிந் திரபூ சகன்றனையுஞ்
செய்ய வத்தீச் சுரலிங்கஞ் சிவனு மனைய திருமலையே. (௨௨)

வேறு.

கொங்கைநின் றிழிபால் கண்டு தெவிட்டுறக் குடிப்பா ரூர்வ
மங்கண்மிக் கோடிச் செல்சே யாமென வாங்காங் குள்ளார்
தங்களுண் மகிழ்ந்து சென்று சையவெற் புச்சி நின்று
மிங்குல குய்யப் போது நீத்தங்கண் டின்பு கூர்வார். (உ௩)

இராவணன் கயிலை மாண்போர்ந் திறக்கொணர்ந் துய்ப்பான் சென்றான்
பராவுமிந் நாட்டார் சையம் பல்வடஞ் சேர்த்தொன் றாக்கி
விராவியீர்க் கின்று ரென்ன மேற்பல வருவி யொன்றித்
தராதலத் தேகு பொன்னித் தண்கரைச் செறிவர் பல்லோர். (உ௪)

சிவனிடத் தகில மீன்ற சிவையுறு மியலா லாவி
யெவைகளு முய்வான் போது மின்னருள் வெள்ள மென்னச்
சிவனுறு சைய வெற்பிற் செல்லுறு செயலா லாவி
யெவைகளு முய்வான் போது மினியகா விரியி னீத்தம். (உ௫)

வாலநத் தூர்சி றப்பால் மறைமல ரயனை மாலும்
பாலனத் தபிவி ருத்தி பயிற்றலான் முருகுந் தனேருங்
காலனத் துறச்சென் மாண்பாற் கண்ணுதல் விழையுந் தென்சொற்
சீலநற் றவன்க மண்ட லோதகந் தேக்கு பொன்னி. (உ௬)

வேறு.

அயனகரமார்ந்தோராசுவேண்டுறச்சென்றவிர்சடைத்தருஞ்சியோர்முனிவாய்த்
துயருறப் புகுந்து மிச்சிலாய்க் காதிற் றோன்றியென் படலைசேர் கங்கை
மயலுறச் சிவன்பால் வைகியோர் முனிக மண்டலத் தூற்றொரு கோட்டுக்
கயமுவந் தொழுக்க நந்தனம் புகுந்த கவின்மிகு சிறப்பநற் பொன்னி. (உ௭)

இயல்பினிற்பளிங்கொத்துறுமலைத்தேனையெழின்முலைப்பாறயிர்நெய்யை
வயலினிற் கருப்பஞ் சாற்றினை யீர்த்தவ் வண்ணமா யேழெனக் கடல்சார்ந்
தயர்வகன் றதுவா யகமகிழ் பொன்னி யைம்மலஞ் சார்ந்தவை யாய்ப்பின்
னுயவருள் சிவன்றா ளுறீ இச்சிவ மயமா யுடங்குவாழ் புற்கலந் தொக்கும் (உ௮)

குறிஞ்சி.

குன்றுறழ் புயமேல் வள்ளிமென் கொடிமுன் குலவிய தருநலங் குறித்தோ
குன்றுறழ்நாற்கோட்டிபந்தனதிடப்பூங்கொடியினைவளர்த்தமைகுறித்தோ
குன்றுவந் தன்னை வந்ததுந் தந்தை குன்றவிற் கொண்டதுங் குறித்தோ
குன்றுதோ றாடுங் குமரனைக் குறவர் குலந்தொழ வமர்வது குறிஞ்சி. (உ௯)

உயர்பொரு ளனமே வாதிற வுளரோள் ளொளிமணி யாதிக ளொதுக்கி
யுயர்வெனத்தினைமுன்விதைத்துறுபயன்கொண்டுதம்பெரிதெனநுகர்ந்தவ
ருயர்மறைமுடிமேலாசுவீற்றிருந்தாங்கொளிர்சையமேற்கொளுநழின்றி[ப்பா
யுயர்வெனக் கொடுதத் தம்மதமேற்சென் றுண்மைநோக் குரானிலார் போல

காளத்தி யணுக விருண்மல வலியைக் கடிந்தெனத் தடிந்தெறு ழியைமுன்
வாளிற்கண் ணப்பர் வதக்கித்தற் போதம் வழங்குதல் விளங்குற வவ்வூ
னளத்தற் களித்தாங் கிறவுளர் வேட்டத் தாதியிற் பட்டவே னத்தூ
னளத்தண்மலர்ச்சேவடிக்குகன்றிருமுனலம்பெறப்படைத்தனர்நமப்பார்.

குன்றவர் மகளி ருடுப்பன குழைகள் குலவுகா தடுப்பன குழைகள்
வென்றிகொள் விழிகண் டிரிவவு முழைகள் வியாக்கிர மடுப்பவு முழைக
ணன்றுளிர் தாரா முகுப்பன கழைக ணங்கையர் மொழிகளுங் கழைக
ளொன்றுபல் லருவி தருவன மழைக ளும்பர்நின் றிழிவன மழைகள். (௯௨)

இறவுள ருழையி னுழையுரி நாக மேழைய ரல்குல்பைந் நாகம்
பொறைதரு மொண்பூண் முலையிணை நாகம் புயலெதி ரொலிப்பது நாகஞ்
சிறுமிய ருதைப்ப மலர்வது மசோகஞ் செயல்வகை யெவைகளு மசோகம்
விறன்மயி லூர்தி விழாக்கொளு ள்விசாக மிசைவதை வனத்தவி சாகம் †

அழகிய திருச்சிற் றம்பல முடையா னென்றருட் கையெழுத் தமைத்தாங்
கெழுதிய சுருதி யருளிய மணிவா கீசர்வா கீசருந் தாரங்
கழுமல மணிமுற் பெரியர்தஞ் சுருதிக் கண்ணெடுத் தேத்துகண் ணப்ப
முழுமணி தருமிவ்வனசாருலச்சீர்மொழியின் முற்று றுங்கொல்பல்லுகங்கள்.

தங்குலமுதலென்றெங்குபோரார்வந்தழைத்தெழக்கண்ணப்பரிணைத்தாட்
பங்கயம் பரம்ப ரைப்பணி புளிந்தர் பரவுமக் குறிஞ்சியீங் கோயுத், துங்க
வெற்பெறும்பீச் சுரஞ்சிரா மலையே தூயவாட் போக்கிரத் தினமுன், னெங்
கணு யகன்வாழ்மலைத்தலம்பலகொண்டிலங்குமேலிசைப்பதெங்கிதன்சீர்.

முல்லை.

அண்டர்தம்பொருட்டேபாற்கடல்கடைந்தாங்காலத்தாலமிட்டலந்தவ்
வண்டரோ டமல னருளினு லமுத மளித்தன மவர்க்கவ்வா றன்றிவ்
வண்டர்தம் பெண்டிர் பாற்குடங் கடைந்தா ரமுதெமக் களிப்பரா தலினிவ்
வண்டர்வாழ்நிலமேு ம்புதல்கடனெமக்கென்றுழிமாலளிப்பதுமுல்லை. (௯௬)

பன்னெறிகளையுந்தழூஉம்பொதுச்சைவபசுபதியண்டன்பொற்பொதுவன்
றன்னுயி ருடனு யியக்குபு கருமந் துய்ப்பித்தாங் கிதம்புரி தொழில்போ
லின்னிலத்தண்டர்பொதுவர்பல்லான்மெய்த்தியக்கலாற்பசுபதிப்பெயர்பெற்
றங்கிரையேது மிடந்தொறு முடன்சென்றவை புசிப்பித்திதம்புரிவார். (௯௭)

குடத்தியர் கொங்கைக் குடத்தியர் துத்தக் குடத்தியர்நடத்தியற் குடத்தன்
குடத்தியல்பான்முன்னெடுத்தியல்காத்துக்குடித்தனனடித்தனர்முன்னோர்
குடத்தியல்பான்முற்குடத்தனோர்நாமேகொடுத்தருள்பெறுதுமென்றுங்குக்
குடத்தியல்பான்முற்கொண்டியர்பூவைகுலவுறுநெறியினேகுவரால். (௯௮)

திடத்துறு விறகிற் றீயெனப் பாலிற் றிகழ்தரா நெய்யென மறைந்தெவ்
விடத்தினு நிறைந்த சிவனைநாங் காணே றிதுவென வாசுசொல் சுருதித்
தடப்பொருணோர்காட் டுநரெனப் பொதுவர் தாமரை ணியைக்கடைந் தும்பால்
குடத்தியர் கடைந்து மாயராய்ச் சியரென் குறிப்பொரு ணனிவிளக்குவரால்.

பூவைதன் னடிமே லாவினஞ் சூழப் புடையிருல் வெண்மதி பொருந்த
வாவினம் பொழிபா னிலனெலாம் பரவ வாயிடை நிற்றலவ் வாழி
தூவளை பரித்த கரன்பயோ ததிமேற் றுலங்கா வணையுற றுணையு
மோவற வங்கண் மேவுபல் லண்ட ருவன்பரி சனங்களை யுறழ்வார். (௬0)

† ஐவனத்து அவி—மலைநெற் சோறு. சாகம்—காய்வகை.

பூவையர்மலர்ப்பூங்குழல்கள்பைம்பூவைபுகன்றிடுமொழிகண்மென்பூவை
தாவற நாளும் வளர்ப்பர் நம்பாவைச் சாற்றரும் வடிவு செம் பாவை
கோவமென் றயிர்க்கு மதரவாய் கோவை கூடியின் புறுவர்தங் கோவை
மூவரி னிடைய ஞயதந் தேவை முன்னிவாழ் வுறலயர் தேவை. (௪௧)

சைவமந்திரமென்றுலகெலாமுணர்ந் துதலைமிசைக்கொண்டுவந்திறைஞ்சுந்
தெய்வமந் திரமூ வாயிர முலகர் திருந்திய மொழிந்தருண் மூல
மெய்வமந் திரங்கட் குள்ளுயி ராமைந் தெழுத்திசை பரப்பிவெள் ளொளியே
செய்வமந் திரனை § யழைத்தவா றுபர் திருக்குலத் தவரிவ ரம்ம. (௪௨)

உலகெலா முயத்தென் மறையமு தூட்டி யோம்புவா கிச மாதாவுக்
கலகிலாப் பொதிசோ றளித்தபைஞ் ஞீலி யாங்கிடர் கலை கெனவுமைபொன்
முலைநிலா வமுதுண் டருண் மணி பதிக முழுதரு ணெடுங்கள முதலா
நலனுலாந் தலம்பற் பலதனில் வாய்ப்ப நற்றவம் புரிந்தது முல்லை. (௪௩)

மருதம்.

இந்நிலத் துதித்த தெங்குபூ காதி யாவுமொண் சாலிவண் பயிரு
மெந்நிலத் தணியாய் விழிக்கெலா மின்பா யியன்மகா திகட்குத வியுமா
நந்நிலத் தருக்க ளாலுமிந் நலங்க ணமக்கிலை யெனச்சுரா திபனிச்
செந்நிலம் வளர்க்குங் கடனெமக் கென்றே சிறப்புறப் புரப்பது மருதம். (௪௪)

வேறு.

உயிரென வெழுத்தோ ரைந்தை யுடைமையா னெசுர்வே தம்மே
யுயிரென நான்கு வேதத் துட்சிறந் தொளிரு மாபோ
லுயிருடற் குயிர்நி லைத்தா மோதன முதவு நீரா
லுயிரென நானிலத்து ளொளிர்வது மருதமொன்றே. (௪௫)

பூவனமணம்போல் யாண்டும் புணர்சிவ சத்தி யின்பாற்
பாவன வருளின் வெள்ளம் படர்ந்துறு பான்மை போல
மாவன முகில்சூழ் வெற்பின் வந்தொழு கருவிப் பொன்னிச்
சீவன வெள்ளம் பல்காற் றேக்குபு செல்லு மெங்கும். (௪௬)

தாயர்தம் முலைக்கு டத்துத் தங்கசை இ யுண்ண வோடுஞ்
சேயர்க ளென்னப் பொன்னித் திருநதி நீத்தங் காலிற்
பாயவந் தூர்க டோறும் பல்குபல் லுழுவ ரன்னை
தூயவா ரமுத மாங்குச் சூழ்வயல் வாய்மடுப்பார். (௪௭)

சைவரைக் கண்டு முட்டுச் சாற்றயான் கேட்டு முட்டென்
றிவ்வுரை புகல்வேன் துள்ள மெனக்குழை யாவ யற்கட்
செவ்விநீர் புகலுங் காழிச் சேயருள் வெள்ளம் புக்க
வவ்வா சுளநெ கிழ்ந்தாங் கணிநிலங் குழைந்த தன்றே. (௪௮)

எத்துணை மாறு பாட்டி னிளகுருக் கொடிய வன்மைச்
சித்தரே யென்னி னும்போ கித்திடு சிவாசான் சர்வ
சத்திமா னென்னில் யாரே தப்புவா ரொப்புறுமவ
லித்திறங் காழிவாழ்வா லிளகிய வரசாற் கண்டாம். (௪௯)

---

§ வெள்ளொளியே செய்வதாகிய மந்திரம்—கயிலாசம்

சாமிவாழ் வருட்கை நீண்டக் காவலன் குழைந்த நெஞ்சி
னெழுமவ் வினைமுன் போழுற் றறிவொளி யெழத்தீர்ந் தாங்கு
மொழிகொண் டுழுவர் பல்கால் வியனில முழுக்க சாலில்
வீழ்மணி யெழுப்ப ரம்பு மிதுகைத் தொப்புச் செய்வார். (௫0)

கவுணியர் குலதீ பம்பாற் கமழ்திரு வாய்ம லர்ந்து
செயமணி மந்தி ரச்சொற் றெளிப்பவுந் தென்னர் கோமா
னளிநுளத் துறீஇமு னைத்தாங் கந்நிலத் துழுவர் சொற்க
ளுநயகைமீக் குறத்தெ ளிப்ப வுடன்முளைத் தெழுந்து பல்கும். (௫௧)

வழுதியர் கோனு ளஞ்சார் மந்திரச் சொன்மு ளைத்தாங்
கெழுசிவத் துமையின் பைங்கே ழிலங்குத லென்ன வித்து
முழுவர் சொன் முளைப சப்புற் றோங்கிநின் றுலகெ லாமுந்
தொழுசிவம் பணியா தியார்க்கு மொனுமறைத் துணிபு ணர்த்தும். (௫௨)

அகத்தொளிர் சிவம்ப ரார்த்த மாப்புறத் திலுந்தா பித்துச்
செகத்துயப் பேணுஞ் சைவா சிரியர்போ னுற்றங் காலி
னகத்துறு நாறு கைக்கொண் டப்புற நிலந்தா பித்துச்
செகத்துய வுழுவர் தத்தஞ் சிவளிற் பேணல் செய்வார். (௫௩)

தெளிபரி பாகர் நெஞ்சிற் சிவமுத லிளக்கம் வாய்ப்ப
விளையுமின் பமுதுண் டன்ன வசத்தராய் விளங்கல் போல
வளர்நிறை சொல்லி ளம்பி மள்ளர்மங் கையர்கண் மாந்தி
யளவறு சொல்லி ளம்பி யவசரா யிலையு ரைப்பார். (௫௪)

எருநல்யான் வருவீர் காலோ நீவந்தோ மவன்றான் றென்று
மொருவன்வம் தார்கண் மற்றோ ருற்றன னெருது நின்றான்
வருகளை வளர்ந்தா சாலி மள்ளர்கள் பிடுங்கிற் றென்பார்
மருவிடந் திணைபால் கால வழுக்கற்பார்க் குணர்த்து வார்போல். (௫௫)

வருகவென் பாரை யெம்மைப் போகென வழங்கிற் றென்னென்
றருகுறீஇச் சினப்பர் மேல்பா லழைத்தல்கேட் டெதிர் பிராசி
விரைபொரு ளுத நேர்நீர் விளித்தமெ தென் பழந்தா வென்பார்
பரியமாங் கனியெனுத் தென் பழமுதிர்ந் தனசு வைப்பார். (௫௬)

கோதறு வெண்க டற்கட் குடியன்காப் புறுமா லன்றான்
காதலன் பிரமன் போதின் கட்குடி யன்மற் றெங்கள்
சாதியே தால போலாத் தலைக்கொளு நீர தாகுந்
தீதினஞ் சாதிபோனஞ் சாதியார் திறத்தின் றென்பார். (௫௭)

சிவமுத லொளிரு ளத்து வாசனை மலஞ்சேர்ந் தாலெந்
தவிரெழுத் தறைந்து சேட மறக்களைந் தப்ப யன்கொள்
பவரென விடையி டைச்சார் பல்களை கட்டுச் சாலி
யுவகையி னுயிரின் மேலு முழவரின் புறவ ளர்ப்பார். (௫௮)

தன்னருண் மந்தி ரச்சொல் சார்தெடு மாறருள்ளத்
தின்னருட் சைவப் பைங்கூ ழெழிலுறச் சண்பை வள்ளல்
பின்னரும் பதிகத் தெண்ணீர் பெய்தலி னுழவர் சாலி
நன்னிலை யுறநீர் செயவி நாடினின் றுய்ப்பர் பின்னும். (௫௯)

மேனிமிர்ந் தெழுபைஞ் சாலி வெண்கதி ரீன்று முற்றி
வானிறம் பசந்து பொனமை மரீஇப்பழுத் தவ்வி யத்த
மானின்முக் குணவி யத்த மற்றவற் றுலீசன்பா
லானம ருருத்தி ரன்மா லயன்வருந் தோற்றங் காட்டும். (௬0)

பணியுமா பணியே யென்று பகர்தரு சுருதி வாய்மைத்
துணிபுநேர் காட்டி யாங்குச் சொல்கதிர்ப் பாரம்பொ றூது
மணிநெடுந் தலைவ ணங்கி வயங்கல்கண் டுழவ ரன்ன
வணிநிலம் புரக்கும் வேந்தி னருணினைந் திறைஞ்சிச் சூழ்வார். (௬௧)

கதிர்விசும் பிறைவ னேகண் காணமா கம்மே லோங்கக்
கதிரரிந் தரிகி டத்திக்கனவரை யெனவு யர்த்தி
மதியணி புனிதன் சொன்ன மலையினைத் தாங்கந் நெற்போர்
மதியணி மலைகள் சாய்த்து மாடெலாம் விரிப்பார் மள்ளர். (௬௨)

வேறு.

எனதுபுன்மொழியென்றிகழ்ந்திடாதுள்ளமியைத்தயிராவதநாதன், புனித மான்மியங்கொண்டின்புறும்பெரியர்போலரிப்பரப்பிமேலற்றினங்க, ளினிது கைத்தொதுக்கிப்பலர்லம்பொங்கழிகாற்றினினனி தூற்றிமென்மணிகொண் டனையமான்மியம்பக்குவர்க்குஞ்சொல்லுவர்போலறுவகைபாத்தளித்துவப் [பார்

கனிகளின் மூன்றே சிறந்தன வவைமுற் கருதுபல் சிறப்புடைப்பொருள்க ணணிமிகு வளனும் பொலியுமப் பனையே நால்வர்சொற் பதிகங்க ணனிசா ரனகவண் புகலி கமலைவீ ழியை யாறிடை மருதுபொற் கோயி லினையன தலம்பற் பலவுள வம்மா விந்நிலப் பெருமையா ரிசைப்பார். (௬௪

நெய்தல் வேறு.

வினை நிலங்கட்க சந்பருரித் தியல்பன் றேனு மினித ளிப்பார்
யானை நிலமின் னதற்குரிமை யியல்பி னுடையே னீதலதூஉ
மேனை தனையை யீண்டுநித்தாள் விழைந்து மருகா யிவண்ம ணந்தா
ஞனை யுடையா னெனவருண ஞர்வ மிகப்போற் றுவநெய்தல். (௬௫

புறவ முகந்து போற்றினன்கான் முனைபோற் றியமுந் நீர்த்தேவை
நறவ முகந்துன் னுறுமலர்ப்புன் னைக மூலை நறுநிழலிற்
சுறவ முகந்து லங்குமருப் பூன்றித் தொழுது முன்படைத்த
நறவ முகந்துண் பரதர்பாத் தியர்க ளுளு நனிகளிப்பார். (௬௬)

கலைநீர்க் கடலு ளாழ்பொருளுட் கண்ணு றேக்கி யெடுக்குநர்போ
லலைநீர்க் கடலு ளாழ்துவர்சங் கார மாதி குளித்தெடுப்பார்
கலைநீர்க் கடலு ளாழ்பொருளுட் கரைசீ டர்க்கு விரிக்குநர்போ
லலைநீர்க் கடலுட் பொருள்வாரிக் கரையின் விரிப்பா ரப்பரதர். (௬௭)

## திருநகரச் சருக்கம்.

உலகமெலாம் பற்பலவுண் டியானை மெய்யுரைத்தற் கொல்வா தென்பான்
பலவளநீள் வகலமெலாம் பன்முறையு நனிபார்த்துப் பார்த்திவ் வூரை
யுலகமெலாம் புகழ்பிரக தூத்தியா னம்மெனமுன் னுரைத்தா னம்ம
பலவளனுஞ் செறிசுவர்க்கபதியாஞ்சுந்தரமெனனில் யாம்பகர்வ தென்னே (க)

### பொதுநகர் வேறு.

பொன்மை சான்றபன் மாடங்கண் மிசையெலாம் பொற்ப
வின்மை சான்றவச் சிரமணி பதித்தொளிர் விதத்தான்
முன்மை சான்றகண் ணுதலரு ளருமெனு மொழியு
நன்மை சான்றது திருப்பெருந் தோட்டமா நகரம். (உ)

துங்க நீண்மணி மாடங்கண் மரகதச் சுடர்ப்பொற்
பைங்கண் மாடஞ்சொற் பயிர்களுஞ் சூன்றும்வாழ் பழன
மெங்க ணும்பசுந் தொளிர்தலா லிமாசல மீன்ற
நங்கை போல்வதத் தீச்சுரப் பெருந்திரு நகரம். (ந)

கயமு கத்தன வாடலை வளைத்தவக் கவிருற்
கயமு கத்தன வாடலை வளைத்தவக் கவிரு
னயமி குத்தவா ராடிய கணேசன்போ னூடு
நயமி குத்தது திருப்பெருந் தோட்டமா நகரம். (ச)

இச்செய்யுளின் முதலடியை, "கயமுகத்தன் அவ் ஆடலை வளைத்" என்றும், "கயம் முகத்து அன ஆம் அலை வளைத்த" என்றும் பிரித்து, முறையே கயமுகாசுரனது அந்த வெற்றியை யடக்கிய எனவும், வாவிகளிடத்துள்ள அந்த ஆகின்ற அலைகள் விலக்காப் புனையானவாகிய எனவும் இரண்டாமடியை, கயமுகத்தன ஆள் தலை வளைத்த என்றும் கயம் உகத்தன வாள் தலை வளைத்த என்றும் பிரித்து, யானை முகமிருயகநுடைய ஆனைதலைத் தன்னிடத்துக் கொண்ட எனவும், இப்புவியைப் பொன்மொருளியை இடந்தோறுஞ் சூழ்வித்த எனவும் பொருள்கொள்க.

மலைவி லார்நுதல் பார்ப்பதி கண்மணி யெனலாற்
கலைவி லங்குமா கரவான் காதல மாண்பா
லுலகெ லாம் § தனி மொழியிறோர் குமரனை யொக்கு
நலனி றைந்தபல் வளத்ததத் தீச்சுர நகரம். (ரு)

இச்செய்யுளின் முதலடியில், மலைவில்லார் நுதற்கண்மணி பார்ப்பதிகண்மணி யெனத் தனித்தனி கூட்டி முருகனுக்கும், மலைவு இல்லாதவர்கள் நுதலுகின்ற பாரிலுள்ள பதிகளுக்குமணி எனவும் என்று நகருக்கும், இரண்டாமடியில், மான் விளங்கும் மாகர அரனது புத்திர மாண்பாலென முருகனுக்கும் கலைகள் விளங்கும் ஆகர மேன்மையை யாவருங் காதலிக்கின்ற மாண்பாலென நகருக்கும் பொருள்கொள்க.

வீதி யெங்கணும் விழாவணி யொடாறும் விளங்கும்
வேதி யெங்கணும் வீதிகோத் திரநலன் விரவும்
பூதி யெங்கணும் புறத்தகத் தருளறப் பொலியுஞ்
சோதி யெங்கணுந் துதைதரு திருப்பெருந் தோட்டம். (சா)

§ தனிமொழி—திருப்பதம்

வேதனாவினும் பாரதி வீற்றிருந் தருளும்
மாதவன்னித யத்தினுந் திருமகள் வாழும்
போதை யார்கணின் ஞானவண் மகண்மிசைப் பொலியு
நாதன் வீற்றிருந் தருளுமத் தீச்சர நகரம். (௭)

இந்திரன்னப னிந்திரை கேள்வன்முன் னிமையோர்
வந்து வந்தபி ராமநா தனை வணங்கித்
தந்த மிட்டகா மியம்பெறீஇ வாழ்பெருந் தகைத்தா
னந்தி நாயக னமர்பெருந் தோட்டமா நகரம். (௮)

உம்ப ராதிபா வருந்தினம் புநதலா லுமைசே
ரும்ப ராதிப னருள்கொடு போதலா லுலக
நம்பு நூ*லந்த மாதியென் சொற்பொரு ளவிலு
நம்பி ரானமர்ந் தருளுமத் தீச்சர நகரம். (௯)

நெறியி னீங்குவ கதிர்களே மாடநீ ணிரையா†
லறிவி னீங்குவ முலைகளை யறப்பணைத் திடலாற்
செறிவி னீங்குவ கழறரு காய்களே செலுத்துங்
குறியி னீங்குவ யாங்கணும் பூங்கணைக் குலமே. (௧௦)

மெலிந்தி ரங்குவ மணிக்கலை மெல்லியர் நுசுப்பே
கலங்கு நீரது காவிரிப் புதுப்புனற் கதிப்பே
விலங்கி யோடுவ வடைந்தவர் மிடைந்ததீ வினையே
கலங்கு லாவிய திருப்பெருந் தோட்டமா நகரம். (௧௧)

வேறு.

பொழில்கள் கீழ்ப்பெய் புதுநற வாறுபோய்க்
கழனி சென்று கதிர்விண் ணெழுப்புமா
விழிவு செய்தார்க் கெதிர்செய் வலியிலா
ரொழுகி யேனைப ராலங் குறுற்றல்போல். (௧௨)

தவள மாடமேற் சார்மதி வானதித்
திவள் வளைப்பொரும் வெண்டிர ளைச்சிகைப்
பவள மாடஞ்செங் கஞ்சுகப் பாகன்வெண்
கவளம் வான்கரிக் கீதிறங் காட்டுமே. (௧௩)

இந்து காந்தமா டத்திழி வெள்ளங்கண்
டெந்தை சுந்தர நாத னருளென்பர்
சிந்தை தேர்ந்தெதப் பொருளுஞ் சிவனென
மந்த வாய்மைநேர் கண்டென வாண்டையோர். (௧௪)

கன்னல் சூழக் கமுகுபின் சூழ்தரச்
சென்னெ லோங்குவ பாண்டிமா தேவியா
மன்னை காப்போ டமைச்சர் புறக்காப்பு
மன்ன வோங்கி வளர்சைவ மாண்பென. (௧௫)

---

* நம்புநூலீண்டுச் சிவஞானபோதம்.

† நிரையால்நீங்குவ என இயையும்.

பளிக்கு மாடங்கள் பாங்கிற் பொருள்களைக்
களிக்கு மாறெதிர் யாவர்க்குங் காட்டித்தன்
னொளிக்கு ளாத்தா விதப்பொரு ளுண்மைநேர்
தெளிக்கும் போருட் டேசிகர் போலவே. (கசு)

நந்த னங்களு நால்வகைப் போதுகண்
மூந்த னங்களைக் காய்முதல் வர்க்கென்றும்
வந்த னங்கள்செய் வார்கொள மல்குமாற்
றந்த னங்கள் வரையார் தருதல்போல். (கஎ)

தேனி லங்களி யாரச் செறிந்துபொற்
றேனி லங்களி யாரச்செல் காவினில்
வானி லாங்கலி மாக வளமதி
வானி லாங்கலிமாக வளம்பொரும் (கஅ)

தேனில் அங்கு அளி ஆரச்செறிந்து பொன்மயமான தேநிலம் (தெய்வ நிலம்) களி நிறையும்படி மேற்செல்கின்ற காவிலுள்ள மேலான இலாங்கலி யிற்றங்கிய வளப்பமுள்ள மாகமதியானது, வானுலகில் நிலாவுகின்ற ஒலி யையுடைய அயிராவதமாகினது கவளத்தை ஒக்குமென்று பொருள்கொள்க

திங்க ளோடுசீ மூதந் திளைப்பவான்
கங்கை சென்னி கலப்ப வலங்கல்கான்
றெங்கும் வீழ்ரித் தேசுபா தேசன்போன்
றங்கண் யார்க்கு மடிநிழல் செய்யு§ மால். (கக)

பனைவி ரிந்து பாந்துகீழ் வட்டமா
யிணர்செ றிந்து முறைகிரிந் தேகிவா
னணவு கொன்றை செருந்திக ளாதவன்
புணரோர் காலபொற் றேரிற் பொலியுமால். (உ0)

அறிவொ டோர்ப்புக் கடைப்பிடி வாய்மையாஞ்
செறிநி றைக்குண மில்லார் சிலர்வெளி
யுறவி ளக்கலி னுவன்மன் னோங்கிவிண்
ணிறை பழத்தின் விளக்கு நெறியெலாம். (உக)

போத மன்பு வணக்கம் பொறைநிறை
யாதி யுள்ளத் தமையப் புறங்காட்டா
மேதை யோரின் விளபல மாதுளை
மீது யர்ந்து பழுத்து விளங்குமால். (உஉ)

உரைசெய் நன்மைமுற் றுள்ளுறக் கொண்டவை
தெரிய யாவர்க்குங் காட்டித் திருத்துசீர்ப்
பெரியர் போலப் பிறங்குவித் தொன்றிலா
விரி திராட்சைகண் மேவுமிடமெலாம். (உங)

---

§ ஆல்—வினைமுதல்

வாவி வாளை மகிடமு ழக்கலிற்
றூவி வண்பூந் தருக்கிளை தாக்கவப்
பூவில் வண்டு தடத்தலர் புக்குலா
யோவி லாப்பரி வர்த்தனை யோர்க்குமால். (உ௭)

வாவியோடை தடங்களின் மாடெலாம்
தேவிபாக சிவார்ச்சனை யாதிய
வோவி லாச்சிவ தன்மஞ்செ யுத்தமர்
மேவு சைவ மடங்கள் விளங்குமால். (உ௮)

பன்ன சாலை பதிகர்சேர் சாலைக
ளன்ன சாலை யளகைய ன்ன சாலைமன்
சொன்ன சாலைமுற் றொல்பசு தன்மமா
ரென்ன சாலையும் யாண்டுமிக் கீண்டுவ. (உ௯)

மக்க ளொக்கல் மருவு பிதிரர்முற்
றொக்க பாசத்தி றோர்க்குந் தொன்னூன்முறை
தக்க வாறுசெய் பாச தருமமு
மிக்க வில்லறத் தோரில் விளங்குமால். (உ௰)

வேத சாலை விளக்கு சிவாகம
போத சாலை புராணப் பிரசங்க
மோத சாலை முறைமகச் சாலைசங்
கீத சாலைமுன் னவ கிளர்வன. (உ௧)

வேறு.

அரியயன் முகுந்த னாதி யமரர்நா டோறும் போந்து
பொருவருஞ் சுந்த ரேசன் பொன்னடி பரவ லால்வெண்
கரியனம் வயின தேய னாதியக் கடவுணாந்தி
யொருவற விரவல் கண்டோ ரும்பர்வா முலக மென்பார். (உ௧)

மழவொலி மணச்சீ ரீகை வழங்கொலி தழங்கி யச்சீர்
முழவொலி நடச்சீர் வேத முழங்கொலி சிவாக மச்சீர்
விழவொலி துதிச்சீர் வேள்வி வியனொலி கலைச்சீர் கார்ச்சீ
ருழவொலி யிடைய றாதே முதநியி னிரட்டி யோங்கும். (௩0)

மகத்தவி சுணவேட் டென்றும் வானுல கெல்லாஞ் சாரும்
வகுத்தநா னிலவ ளங்கண் மல்கலாற் புவிமுற் றுரு
மிகுத்தபன் னிதிப்பெ ருக்கம் வேட்டுறு தனதன் வெள்கும்
அகத்தொளிர் கல்வி வாஞ்சித் தருங்கலை வல்லோர் சார்வர். (௩௧)

மலர்பெருந் தோட்ட வாய்மை வளப்பெருந் தோட்ட மென்றெவ்
வுலகமும் பரவு சீர்த்தி யோங்குமிந் நகர்ப் பொதுச்சீ
ரலகில வுரைக்க டங்கா வதன்புறத் தகத்தி டைக்கண்
ணிலவுசீ ரனைத்தே யாயி னுஞ்சிறி துரையா நிற்பாம். (௩௨)

### புரநகர்.

போற்றயி ராவ தேசன் புவனங்க ளுய்வா னென்றும்
வீற்றிருந் தருளும் வாய்மை விளக்கத்தாற் பெருந்தோட் டந்தா
னேற்றுறு பழைநாளின் றேனு மெழினகர்க் கங்க மாகச்
சாற்றுகால் வகைப்ப லங்க டன்புறஞ் சூழ வைகும். (௩௩)

### இரதங்கள்.

இந்திரன் சுந்த ரேச னிணையடி யருச்சித் தீண்டு
வந்தினி திருந்தா னெங்கள் வன்சிற கரிந்த தோதி
யெந்தையா ரருள்பெற் றுய்த்து மௌந்துணிந் தோங்க லெல்லாம்
மந்தில்வந் தமர்ந்த தென்ன வணிமணித் தேர்கண் மல்கும். (௩௪)

எவ்வெழிற் றேருமிவ்வூ ரிரதங்க ளொன்றுக் கொவ்வாச்
செவ்விமிக் கறிஞர் பல்சாற் றேர்தரற் கிடனாய் முற்ற
வவ்விய லூறலாற் றேரொன் றறைந்தவம் முன்னி லைப்பே
ரிவ்வணி நகர்த்தேர் பெற்ற வினம்பற்றி மற்றும் பெற்ற. (௩௫)

இந்திர ஞாலத் தேர்முன் னெறுழ்வலிச் சூரற் கீந்தோ
னிந்திர னரசாய்ப் பூசித் தித்தலத் திருந்த வாலவ்
விந்திரப் பேர்ப்பொ ருந்தத் தாலிவற் கீந்தான் பற்ப
லிந்திர ஞால மென்ன விலங்குவ விரத மெல்லாம். (௩௬)

### கெசங்கள்.

தங்களின் முதலா மேன்மை சாரயி ராவதப்பே
ரங்களி றமலற் பூசித் தமர்தல மெனா*மற் றேழ
கங்களி களிறு மேனைக் கரிகளும் பிடிக ளோடு
மிங்கெளி தறப்புக் கென்ன வெண்ணில விபங்கண் மல்கும். (௩௭)

ஒளித்தமை நாகம் பற்ப லும்பலா யுதநி நீங்கி
வெளிப்பட வச்சந் தீர்ந்து வேழத்துக் களித்த தோர்ந்து
களிப்புறீஇ யருள்பெற் றுய்வான் சருநியீண் டடுத்த தென்ன
வளிப்பொரு மதாச லங்க ளளப்பில சூழு மாங்கே. (௩௮)

வனசரத் தகையடந்தா வளங்களோர் பாங்கர் மல்கு
மனநகி சரங்க ளாம்ப லாம்பல்க ளோர்பாற் பல்குங்
கனகிரி சரங்க ளாய கரியின மோர்பாற் புல்குஞ்
சொனவிலை பிடிகளோடுந் துதைபெருங் கூடம் பல்ல (௩௯)

### துரகங்கள்.

துரங்கமா தவர்வி டுப்பக் குறித்துல குயக்கைக் கொண்ட
வரங்கமான் சுந்த ரேச னருட்பெருங் கடற்ப ரப்பிற்
றரங்கமாண் பந்தி யென்றே சார்ந்துல கவர்வி யப்பத்
துரங்கமா நிரைகண் மிக்குத் தொக்கமர் துறைகண் மல்கும் (௪௰)

அரியசீர்ப் பரிகளெல்லா மட்டமங் கலமே யன்றேற்
றவிலக் கணங்கள் சான்ற பஞ்சகல் யாண மாகும்
பிரவுமா யோக வாய்மை விளக்கமிக் கொளிர்வ வேமற்
றுரைவழுத் துரங்கம் யாண்டு மொன்றேனு மின்றுங் குன்மை (௪௧)

---

* மற்று-ஏழ்-அகம்-களி எனப்பிரிக்க.

அச்சுவ விலக்க ணங்க ளறைந்தநூற் புலவ ரிந்த
விச்சைகூர் பெருந்தோட் டத்தின் மேவியொவ் வொரு றுப்பு
நச்சிமேர் கண்டு கண்டு நவின்றன ரென்று லின்ன
முச்சகம் புகழ்ந் தேங்க முழுந்தசீர் வழுத்த லெய்துவன் (௪௨)

கரிமதங் கடல்க டுப்பக் கந்துகந் திரைவி லாழி
வருநுரை கடுப்பக் கூட மந்துரை பெருக்க லங்கள்
பொருவவே ழுங்கடோணி புரையவெஞ் ஞான்றுஞ் சூழ்வா
லொருபெருந் தோட்ட மூழி யுததி மேற் காழி யொக்கும் (௪௩)

பதாதிகள்.

இப்பெருந் தோட்டத் தென்று மீசனின் னருட்பெ ருக்கத்
துப்பிறைப் புறத்துத் தெவ்வாய்த் துன்னுந ரென்று மின்று
லப்பதி சதனுல் வீர ராங்குளார் கண்டே யத்தாற்
றப்பறத் தம்மிற் றுமே மார்ந் திணைந் துறுபோர் செய்வார் (௪௪)

மன்றினி லெடுத்து நிற்கு மலரடிக் கச்ச முன்னுண்
டன்றியும் விமீனு நவீர ராற்றுபோர் கேட்டாங் கஞ்சிச்
சென்றில னுயிர னைத்துந் தெவ்வலி யெய்ய கூற்று
மென்றிடிற் பெருந்தோட் டத்து வேறெவ ரெதிர்த்துச் செல்வோர் (௪௫)

தேருகைத் தாழிக் காலிற் சேணெறிச் செல்வர் தானைக்
காருகைத் தலக மெட்டோர் கண்ணலின் மீள்வர் பாய்மாச்
சீருகைத் தைதங்க திப்பஃறி ல்வலி யெரிப்ப ராற்றற்
பேருகைத் துலக மேழும் போ லசை விளக்கும் வீரர் (௪௬)

அச்சுரு ளார்பூ ணாழி யடிப்பரப் பதன்மேன் மேற்றட்
டுச்சிகூ விரங்கால் போது யுருச்கண்முன் வருக்கஞ் செய்வார்
கச்சைமேற் றவிசு கோட்டி கண்டைபொன் மேனடை யாதி
குச்சம்வண் கலனை போர்வை குசை கசை தண்டை யாதி (௪௭)

பற்பல வொவ்வோர் பாங்கர்ப் பார்த்தகண் கவரச் செய்வார்
பொற்புற வெறிவ வெய்வ போழ்வமுற் படைகள் செய்வார்
விற்றுதை குணமெய்க் காப்பு விரவுகைச் செறிமுற் செய்வார்
நற்கொழு நுகங்கோன் மேழி நவிற்றுவார் பல்லோ ராங்கே (௪௮)

இடைநகர்.

புறநகர்ச் சிறப்பி னெண்மைக் களவுரான் புகன்றி லேனைத்
திறநல முற்றார் யார்க்குஞ் செப்பரி தமைக வாய்மை
விறனலப் பெருந்தோட் டத்தின் வியனிடை நகரின் மாண்பு
முறனவி லுதன்முற் றுதிங் கோர்சிறி துரைக்க லுற்றேன் (௪௯)

அகநகர் நின்றுல் லாசமாகப் பன் மகளிர் மைந்தர்
தகுசிவி காதி யூர்ந்து சார்ந்துமாங் களிந்து வாழ்வா
னகைமலர் வாவி சோலை நன்மணிச் செய்குன் றாதி
வகைவகை மருவி யோங்கு மன்னிடை நகரின் மாடே (௫0)

வச்சிர மணிச்செய் குன்றின் மான்மதி வானிற் செல்கா
ச்சிலை யுற்றென் றுய்மீண் டாங்குற லரனி டத்தி
விச்சக மொடுங்குங் காலை யெய்திய வுயிர்ம லத்தா
லச்சுறீஇ வினையுண் பான்மீண் டவனியுட் சேறல் காட்டும் (௫௧)

செம்மணிச் செய்குன் றேசிச் சேணிடைத் திகழு வானோ
ரிம்மலை யருண வெற்பென் றெண்ணிவான் கங்கை யாட்டிக்
கைம்மலர் தூய்ப்பூ சிப்பக் கனம்பெய்யா தருவி பாய்தல்
யிம்மித மென்று கண்டோர் விழைவுற விரியு மந்நீர் (௫௨)

பொருவினீன் மணிச் செய்குன்றின் புடையுயர் பொழிற்பூந் தேன்சார்ந்
தருவியா யொழுகல் கண்டாங் கருந்தின ரென்னே யிந்த
மரையினைப் போர்த்த கொண்டல் மதுக்கடல் பருகிப் பெய்த
ரிசுகொல் செந்தே னாகிப் பரவுறில் வருவி யென்பார் (௫௩)

ந்துகாந் தச்செய் குன்ற மிரவினின் மதிநேர் கண்டாங்
நந்துநீர் நந்தனங்க ளூறீஇமலர் முதலிற் பாய
ந்தில்லை கறைநீர் பாய்ச்ச வடுத்தவர் மடுத்தின் நீர்முன்
ந்துபாய்த் தவரா ரென்பார் வாய்மையோ ராத யிர்ப்பார் (௫௪)

செய்குன்ற நிரையினின்று தெய்வகற் பகப்பூக் கொய்து
கின்ற விடையா ரீண்டை நறுமலர் மணமின் றென்னப்
பெய்கின்றார் பாங்க ரன்ன பிறங்குபொன் மலரை யாண்டு
மெய்கின்று ரீண்டு பொற்பூ வெய்துகா ரணமென் னென்பார் (௫௫)

ாதர்கண் மைந்தர் பற்பன் மணிக்குன்றி னமர்கா லாங்குப்
பாதுமோர் கலையைப் பற்றிப் பருவொவ் வாமையிற் கழிப்பார்
ாதியின் பற்றி நெற்றிப் பண்புறு மையின் விடுப்பார்
தமாமதிமுகத்தைச் சிவனுருமையின் வெறுப்பார் (௫௬)

வேறு.

களிர்மலர் வாவிக்குடை வான்புகுத வாரிசமாண்
கைவெள்கி முறுக்குடைவ மூலநோக்கி முகநோக்கி
கண்மலர்க ளூலாவனவீ தறியாம லாதவனோ
கிழ்மென வெவ்வாறியையு நீலாதிக் கையின்றால் (௫௭)

ழிபடிந் தெழும்பாளோர் துடியிடையை யோர்வீர
ழியிலாழ்ந் தனையோவா ரணங்கேபென் றுடன்குளித்துப்
ழியந்தோள் விந்தையெனப் பரித்துவலம் புரியாதி
ழியரும் பொருளெடுத்து மகிழ்வானிற் கரைவருவான் (௫௮)

வியபந் திகணீரி லூற்றனகாண் கெனவொருவ
வியினல் லாருறுப்பி னணிசுட்டி யாங்கொருவன்
வயின்மூ வகைமலரு மலர்ந்தனகோங் கரும்பிதென்றோர்
வைபயோ தரம்பிடிப்பப் பூசலவ ளூம்விளைப்பாள் (௫௯)

* எய்தல்-அறிதல்.

உடுத்துளமென் றுகினனைந்தாங் குறுப்பெவையும் வெளிப்படலு
மடுத்துவர வெள்குறுமின் னார்குறிப்போர்ந் தேகாச
மெடுத்துதவக் காளையர்வெற் றிடைநனிகண் டெடுத்ததுகில்
கொடுத்திடான் கண்ணனிவர் குணம்பெரிதென் பார்கண்டோர் (௬0)

கற்பகமுற் கொடிகடமீ இக் கவின்வல்லி சாதமரூஉம்
கற்பகம்பற் பலவீண்டுக் கருல்வகையென் னெனமலராற்
பொற்பகர்சண் பகஞ்செருந்தி முதற்றருக்கள் பொலிகாவிற்
பொற்பகமின் னார் செறிந்து புதுமலர்கொய் வான்புகுவார் (௬௧)

நன்னுதலார் தன்னுதலா னடைமொழிசா யற்குடைந்த
மன்னுமரா ளங்காள கண்டம்வளர் சுகமஞ்ஞை
முன்னுறவச் சுற்றிரிந்து மொழிநடையா திகணிகழ்வாற்
பின்னுமவை யுளவென்றே பேசவிளங் குறுங்கானம் (௬௨)

மட்டார்பூங் குழலார்கை மலர்நீட்ட மேற்கொம்பி
னெட்டாதமலர்க்கறிந்தாங் கிளையர்புயத் தேந்தினரக்
கட்டார்கொய் தெனநிற்பார் காணுநர்க்குத் தாம்வேறு
பட்டோரப் படாதுபூம் பணைத்தருவி னிரைபோல (௬௩)

பூக்களின்மே லாம்பொறிவாழ் பூக்கருவ வீக்கமறச்
சேக்குறுகைக் கெட்டாத நிறல்காண்டு மெனமகளிர்
மேக்குறுபன் மலர்பறிப்ப வெகுளன்மின் மென்பூவின்
போக்கொழியப் பயன்கொண்மி னெனமைந்தர் புகல்கிற்பார் (௬௪)

மாதர்புகு மப்பொழுதே மலருதவா தமர்செயலை
பாதிரிகே ருதைத்திழித்துப் பகாவிரு பாதவமும்
போதுநனி தருமின்னா புரிந்தாரை யொறுத்தலவர்
மீதுறநன் னயஞ்செய்து விடலெனுநூ லுணர்ந்தவர்போல் (௬௫)

மதிநுதற்செவ் வாய்க்கருங்கண் மணிமுல்லை முகைமுறுவற்
கதிர்மணிப்பூண் முலைமின்னார் கவின்மணிமாளி கையமர்ந்து
விதுமுகவேர் முத்தரும்ப விரைத்தொடைசெய் திளையர்மனத்
துதையளிகள் வனப்புமதுத் துய்த்தழுந்தக் குழல்சூழ்வார் (௬௬)

நிறைமதியின் சிலைமாட நிலாமுன்றிற் பரியங்கத்
துறைதருகா ளையரிரவி லொண்டொடியார் தமைமார்பிற்
பொறைதரக்கொண் டிந்தெதிர்நீர் பொழிந்துகீ ழுறலமர்ந்தாங்
கறைகடலி லரவணையி னலர்மகண்மார் பணையமர்வார் (௬௭)

விண்ணிமிர்மா ளிகைமடவார் வியன்கற்ப கக்கனிகொண்
டுண்ணமுதி னுகர்ந்துவப்பா ருறுசுவைத்தே மாங்கனியுண்
டெண்ணரமங் கயருவர்ப்பா ரின்னமுதும் பயின்றவற்றி
னண்ணுவர்ப்பு மற்றவற்றி னயப்புமுயிர்க் குணமன்றே (௬௮)

மனமுவகைக் கடற்படிய வந்தெழக்கேட் டின்புற்று
னினையினுல கினிலெவரு நிறைகல்வி கேள்வியே
யினியதுணை யெனத்தெளிந்தீட் டினருய்வா னிவையொற்கத்
துனவருமூற் றுந்துணையென் றுரைதிருவாக் குண்மையன்றே. (உ0)

வேறு.

காய வாணியோ ரக்க லாவதி கைக்கொ ணுயகன் பக்க மாகவே
தூய வப்பெருந் தூடலை புக்குடன் றெக்க பேருண் முக்க ணுயக
ஞய சுந்தரே சன்ம கிழ்ந்தம ரணிகி கேதன வணிய ளாகிமுன்
மேய தூலலிங் கம்மி றைஞ்சியுள் விழைவி னேகிமா முகனை வேண்டியே.

சுந்தரேசனைத்தொழுதுபோற்றிமேற் றனைந்துசென்றுல கங்கள்யாவையுந்
தந்த ளித்தினி தருள்ச வுந்தரத் தாய்து ணைப்பதஞ் சார்ந்து காதலின்
முந்து மந்தண ஞய நாயகன் முன்வ ணங்குறப் பின்வ ணங்கினள்
சிந்தை யன்புமே லூந்த நற்றுதி செய்து வேண்டின ளக்க லாவதி. (உஉ)

அனையள் சார்பிணு லகில மீன்றரு ளன்னை சந்நிதி யடுத்த நீரிணுற்
றனைநி கர்ப்பரு முணர்வு தித்தலுஞ் சாற்று மந்தணன் போற்றி நின்றன
னினைய ரிவ்வகை யிடைய றுமலங் கினித மர்ந்துதம் வினைதொ லைந்துற
முனம லர்ந்தபோ தாய னத்தவ முனித டத்துநா டொறுமுன் மூழ்கியே.

புனிதை யொப்பிலா முலைப தத்தினிற் பூசை யாற்றுபு நேசமிக் கெழ[நின்
வினியவைந்தெழுத்தொளிர்பெண்பாற்கிசைந்திடவுருச்சகத்திரஞ்செபித்து
றனையை யற்பொடு நனிது தித்துள மவன்ப தத்தினி லுறநி றுத்தியே
வினைமுருக்கிநூல்விதியின்மெய்த்தவம்விழைவின்முப்பதுதினமியற்றினர்

அன்னர்மெய்த்தவந்தன்னைநோக்கிய வமலையொப்பிலா முலையெம்பிகை
நன்னர் சித்திரைப் பூர்வ பக்கமா நவமி தன்னிலோர் திவ்ய மானமேன்
மன்னு மைங்கரன் முருகன் பாங்குற வாமை யாதியெண் சத்தி சூழ்தரப்
பின்னை வாணியிந் திராணி போற்றுறப் பிறங்கு மாரருள் பெருகிப் பாய்தர.

இருவர் முன்னெழுந் தருளி நின்றன ளெல்லையில்லதோ ரின்ப வெள்ளமே
மருவி யந்தணன் றுணு மக்கலா வதியு மன்னைதாள் சென்னி வைத்துள
முருகி யன்புநீர் வெளியில் வந்தென வுமைய டிக்கணீ ரமைய வாட்டினர்
திருமு னின்றிரு காமு ஞென்றுறச் சென்னி கூப்பின ரின்ன கூறுவார்.

வேறு.

அணியே யகிலத் துயிர்க்கருள் செய்யு மதுலசிந்தா
மணியே யிருகண் மணியே மணிக்குள் வருஞ்சுடரே
பிணியே யொழித்தெமை யாட்கொள நேர்வந்து பேரருள்கூர்
குணியே திருப்பெருந் தோட்டத் ததுல குசாம்பிகையே. (உஎ)

படியேழ் புரக்கும் படியே யருளிற் படிவங்கொண்டாய்
யடியே முயநின் னடியே யருளி யடியிற்செய்த
கடியேய் வினைவன் கடியே யொழியக் கடிதருள்பூங்
கொடியே திருப்பெருந் தோட்டத் ததுல் குசாம்பிகையே. (உஅ)

போதே யதனின் மணமே யெனவியற் பொற்பினுற்று
மாதே வனதிடத் தோர்பெண் ணுருவின் வயங்குகின்றாய்
தீதே யொழிந்துல குய்யவான் றிருவருள் செய்தற்கன்றோ
கோதாய் திருப்பெருந் தோட்டத் தநுல குசாம்பிகையே. (௨௯)

ஒன்றா யொருமூன் றெனுஞ்சச் சிதானந்த வுண்மையுரு
வின்றே சுணரப்பொன் னேங்கல் பவளக்குன் றென்னவொளிர்
மன்றாடி கந்த னிடப்பா லமர்ந்த மரகதப்பைங்
குன்றே திருப்பெருந் தோட்டத் தநுல குசாம்பிகையே. (௩0)

அன்போர் சிறிதில மன்று யதுநின் னருளி னல்லா
லெம்பா லுறவெங் கறியாச் சிறிய மியல்பினிறை
நின்பே ரருட்கொரு கைம்மா றுளதுகொ னீயருள்பூங்
கொம்பே திருப்பெருந் தோட்டத் தநுல குசாம்பிகையே. (௩௧)

கழலே தொழுமடி யார்வினை வீட்டிக் கமலபத
நிழலே புகுந்தொரு வாவின்பு தந்தரு ணோரிழைசெந்
தழலே புரைதிரு மேனியத் தீசன் றனதிடப்பூங்
குழலே திருப்பெருந் தோட்டத் தநுல குசாம்பிகையே. (௩௨)

துங்கா ரமுதிது நேரிலெச் சீவருந் துய்ப்பரிதே
நங்காதற் சேயுண் டவர்க்குறு பாகத்தி னல்கவென்றே
யங்காழி வாழ்வுண வின்பால் வளநிறை யச்சுரந்த
கொங்காய் திருப்பெருந் தோட்டத் தநுல குசாம்பிகையே. (௩௩)

படைப்போன் முதலேவ ரைந்தொழி னின்னருட் பாண்மையினு
ணடப்பான் மனோன்மணி யீசையு மைதிரு நாமகளென்
றிடப்பா வையர்களென் சத்திக ணல்கி யியக்கு மன்னே
கொடுப்பா யருள்பெருந் தோட்டத் தநுல குசாம்பிகையே. (௩௪)

மதியே திருமுக மம்மா மதியின் வழங்கமுதே
துதிகூர் கருணை யுலகம் பொதுவினிற் றுய்ப்பவரு
ணிதியே யெமக்குச் சிறப்ப ருளாகி நிறையவழுங்
குதியோ திருப்பெருந் தோட்டத் தநுல குசாம்பிகையே. (௩௫)

நீறுகந் தக்க மணியைந் தெழுத்து நிகழ்தரப்பல்
பேறுகந் தேதொழு வார்க்கவர் வேண்டும் பெருவரநா
டோறுகந் தீந்தரு ளன்று யருள்க துனைவிடையோன்
கூறுகந் தாய் பெருந் தோட்டத் தநுல குசாம்பிகையே. (௩௬)

வேறு.

என்றேவழுத் தினர்தாழ்ந்தன ரெமையாள்சிவை யுமையா
ணன்றாரரு ளோக்கஞ்செய நவிலந்தணன் றொழுநோய்
பொன்றாமுழு தொழிந்தேயுருப் பொன்றேசினிற் பொலிந்தான்
றன்றோகைம லிந்தான்மலைத் தொழுதோகைபின் னருளும். (௩௭)

மறையோய்நும நதிபூசைமுன் னியமச்செயன் மகிழ்ந்தோ
மறையாகம முதற்பல்கலை வயங்கோர்ப்புனை மருவி
நிறைவாயநின் மனையாளொடு நிறைவாழ்வினி திமர்ந்தே
யிறையாரருட் சிவலோகமு மினிசேர்குதி ரென்றான். (௩௮)

எனவோதுபு முனனாடொறு மினிதாரவமுன் னுறமே
தனையேபர வுயர்மாதவத் தகைசார்கலி யதனால்
வினைவேரற வொளிர்பொற்றொடி தனைநோக்கியவ் விமலை
வனிதாய்நின மனசுக்கிசை மகிழ்நன்றொடு மகிழ்ந்தே. (௩௯)

இருவீருமிங் கமர்வாழ்வுறு மின்பம்பெறி னிதப்பி
யொருவீரென வுலகோதுற வொருவாநிலையந் நீற்றில்
வருவீர்சிவ புரத்தெம்பத மலர்நீழன்மெய் வாழ்வை
மருவீரென வருள்செய்தனன் மலைக்கோயில் புகுந்தாள். (௪0)

புகுந்தாலுமெ னீங்கார்சிவை பொற்சேவடி யிணையின்
மிகுந்தேதொடர் பேரன்புறு வினைவாற்றிருந் தனியு
ளகந்தூயரவ் விருவோர்களு மணைந்தார்துணை விழிநின்
றுகுந்தாரையி னனைந்தார்பினு மோவாது பணிந்தார். (௪௧)

அன்னையெமக் குன்னொரு ளன்றித்துணை யின்றென்
றன்றும்வெளி வெளியர்க்கெவ ரும்பெற்றிடற் கரிய
வின்னொரு டந்தாயிதற் கெளியேங்கள்செய் கைம்மா
றென்னேதிரு வடிக்கட்டொடர்ந் தின்பேதரு மன்பே. (௪௨)

என்றும்பெரு குறுமாவருள் கென்றுதரித் திறைஞ்சித்
துன்றும்பிரி வாற்றாதுளந் துணைச்சேவடி மலரி
லொன்றும்படி வைத்தேயொரு வாறங்குட னீங்கிச்
சென்றும்பரும் புகழ்காவிரிப் பூம்பட்டினஞ் சேர்ந்தார். (௪௩)

சேர்ந்தங்கிரு வோரும்மனை யறத்திற்கிசை செயன்முற்
றோர்ந்தன்பொடு நாளும்புரிந் தருணூல்கள்பற் பலவு
மோர்ந்தின்புமிக் கொளிர்மாசிவ நியமத்துறை யொழுக்கிற்
சார்ந்திங்ஙன நெடுநாளமர்ந் தனர்தாரணி வியப்ப. (௪௪)

மனைவாழ்விலிவ் வகைவாழ்ந்திரு வருமொப்பில முலையெம்
மனையாரரு ளாலேதிரு வடிநீழலின் படைந்தா
ரெனவோதினன் மலயாசல வெழின்மாதவ னென்றே
நனிமாதவர் களிகூர்தர நவின்றான் முனி சூதன். (௪௫)

கலாவதிச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம். (௬௬௫)

## திருநீற்றுச் சருக்கம்

மாதவன் சென்னியின் மலர்க்கை வைத்தொர்பான்
மாதவ னருவுரு வடிவ மாக்கியம்
மாதவப் பூசித்த மாயை வண்டமிழ்
மாதவன் மாதவர் மகிழ வோதுமால். (க)

அருமறை முனிவிருள் ளமையக் கேண்மினோ
திருமறை யாறியாந் திகழு நூலெலா
மொருமையின் விதந்தெடுத் துரைசெய் மேலது
பொருவரு நீறது பூதி யென்பதே. (உ)

பூதியென் பதப்பொருள் புகலிற் பற்பல
மேதரு மவற்றின்முன் விளங்கி நிற்பதா
மோதுமை சுவரிய மென்று மொண்பொருண்
மாதரா சுவரிய மென்ற வாய்மையால். (ங)

பொதுவெனப் பிறர்க்குநீர் புந்தி கொள்ளன்மின்
னதுதன தாக்கொளு மண்ண லீசனே
யிதுபெயர் பிறர்க்குமா மென்னி லன்னர்பேர்
பதிமுத லடையடுத் தன்றிப் பற்றுறா. (ச)

அடையுறா தியல்பினி லமரு மீசப்பேர்
மடலவி ழிதழிவான் கங்கை மாமதிச்
சடையுமா பதியெனச் சாற்று மப்பதிக்
குடையதே வேறெவர் பெறுபப ருப்பெயர் (ரு)

தருமறை யாண்டுமீ சான சந்தத்தா
னருமறை யேனியெங் நாதன் றன்னையே
புகலுமற் றமரரைப் புகன்ற தில்லையால்
திகழுமீ தங்கையி னெல்லி யென்பதே. (சு)

மறைமுதற் கலையெலாம் வழுத்த லன்றியு
மறைவரிவ் வுலகரா லயங்க ளங்கங்கே
யுறைவர்பே ராலர னொருவன் கோயிலை
நிறையுமீ சன்றளி யெனநி கழ்த்துவார். (எ)

ஆதலா லீசப்பே ரானுக் கல்லது
போதரா தேனையர் பாங்கிற் பொற்புறு
மீதொரா தெவர்களு மியைவ தன்றியே
மாதரான் மறுக்கொணு வழக்கிற் செய்யுளில். (அ)

அன்னது நிற்கவவ் வமல வீசப்பேர்
மன்னுதா துவின்பொருள் வாய்மை யாளுத
லென்னலெம் மதத்தரு மிசைந்த தாதலா
னன்னரி னுலகெலா மாளு நாயகன். (கூ)

ஈசனே யென்பது திண்ண மித்தகு
மீசசம் பந்தமே யெடுத்து முன்னர்நாம்
பேசுமை சுவரிய மின்ன பெற்றியாற்
பேசுமப் பரனதே பிறங்கு பூதிதான். (௰)

இத்தகு பெருஞ்சிறப் பெய்து பூதியை
யுத்தம மறைகளு முபப்பி ருங்கணப்
பத்தியும் பகரிதி காசப் பண்மையு
மொத்திட வெங்கணு மெடுத்து ரைக்குமால். (௧௧)

பாவன பற்பசா பாலமென் பெயர்
மேவிய வுபநிட முற்று மேதகு
தூவிய னீற்றையே சொல்லு மாண்பினு
லோவற மறையந்த மற்று மோதுமால். (௧௨)

அன்றியு முலகெலா மருள்பெற் றுய்வுற
நன்றரு ளுருக்கொடு வந்த நால்வர்தந்
தென்றமிழ் மறை யெலாம் பின்னுஞ் சேர்தரு
மின்றமிழ் நூலெலா மெடுத்தி யம்புமால். (௧௩)

இவையலால் வைணவ ரினிது சென்னிமேற்
றிவளுறக் கொளுந்தமிழ் மறையுஞ் செப்புமா
லுவமையி லித்தகு முண்மை நோக்கியே
சிவனரு ணீற்றைமா லணி திறத்தினே. (௧௪)

பாரத மாதியும் பகரும் பாங்குற
நாரண ஞதியர் நயக்கு நீற்றினை
யாரண முதலவ னருளும் பூதியின்
சீரினை யுள்ளவா செப்புவா ரெவர். (௧௫)

பூதியி னியலிருண் மலத்தைப் போக்கியே
மேதகு சிவத்துவ விளக்கஞ் செய்வதே
யாதலின் மலமற வகிலத் தேவரு
நேதக மேற்கொண்மா நியமித் தானரன். (௧௬)

இருண்மலஞ் சுட்டரு ளிலக்கு பூதியை
மருவுத லறிகுறி யாவ யக்குமாற்
றெருட்டரு கோமயஞ் சுட்டுச் சீவர்கள்
பொருவறப் பூசுமப் புனித பூதியே. (௧௭)

அன்னநீற் றினைச்சிவ னணியும் பெற்றிதா
னென்னவுந் தன்வயி னொடுங்க வென்றுந்தான்
மன்னொடுங் காதென்றும் வயக்கந் தேற்றலு
மூன்றுற வாட்டுவான் செயலு மொக்குமால். (௧௮)

உயிர்மலப் பிணிமட்டோ வுடலிற் பல்பிணிச்
செயிர்கடி பூதயே தாளத் திண்பிணி
யயர்முத லிடரெலா மகன்றின் பாரமுந்
நயனஞ் ருயிர்க்கரு ணன்ம ருந்திதே. (கக)

அனையவெண் பூதியவ் வமலற் பேணியே
புனைதரிற் பலிப்பதாம் புறம தத்தர்மற்
றெனையர் மந்திரங்களு மிதுகைக் கோடலான்
மனனுறப் பலித்தனேர் வயங்கக் காண்டிமால். (உ0)

ஓதுமப் பூதிதா னுடலு யிர்ப்பிணிப்
பேதுற விரண்டையும் வீட்டிப் பின்னுகன்
பாதமே வுறப்புரி பண்பிற் றேர்கதை
மாதவிர் கேண்மென வழங்குங் கும்பசன். (உக)

மலர்தரு வளப்பெருந் தோட்ட மாநக
ரிலகவா ழொப்பிலா முலையி டத்தம
ரலகிலா வருளாயி ராவ தேச்சுரன்
குலவுபங் குனிவிழாக் கொண்டு லாவரும். (உஉ)

அத்திரு விழாவிலந் தாய நாளினில்
வித்தக மால்விடை விமல னூர்ந்தரு
ளுத்தம வுலாத்தரி சிக்க வுற்றனர்
பத்தியி னவர்நாங் கூரிற் பார்ப்பனர். (உங)

ஐவரு மங்கணத் தீச னம்பொற்றண்
மெய்வரு மன்பினின் விதியிற் போற்றியாங்
குய்வருள் சிவப்பிர சாத வொண்பொருட்
டிவ்வியநீ றுகைக் கொண்டு சென்றனர். (உச)

சென்னெறி மணிகன்னித் தீர்த்த வொண்கரை
யின்னிமிர் போதியி னிருந்த வைங்தொகை
வன்னிலைப் பிரமராக் கதத்தர் மண்ணக
ளன்னரைப் பற்றியா ரஞர்வி ளைத்தன. (உரு)

அஞ்சினர் நடுங்கின ரய்யகோ விவண்
நஞ்சணி கண்டனை நமர்து சேறலாற்
செஞ்சுட ரின்றியிவ் விரவிற் சென்றனம்
வஞ்சக வன்கடி விளைந்து பற்றின. (உசு)

அவ்வயி ராவதே சன்ற ளுரரு
ளிவ்விடை யுதவில தென்னி லேழையே
மெவ்வகை யுய்துமென் றெண்ணியத் தீச்சுரன்
றிவ்விய நாமமந் திரங்கள் செப்பினார். (உஎ)

அன்னரு ளொருவனவ் வமலன் கோயிலின்
முன்னுயப் பெற்றவம் முதவெண் ணீற்றினை
யின்னதே காப்பது காப்பி தன்பெய
ரென்னலா லெனத்துணிந் தெடுத்துத் தூவினான். (௨௮)

தூவிய பூதியத் தூவி னான்முதன்
மேவிய வைவர்மேல் விரவி நன்றியு
மாவயிற் றீச்செய லாற்[illegible]
பாவவன் கடிகளின் மே[illegible]. (௨௯)

பனவர்மேற் படலுமுன் [illegible]
மனம் வெரீஇ பொ[illegible]
மனையகீ றூற்றதா [illegible]
முனமுறு மயர்க்கி[illegible]. (௩௰)

அருமறை [illegible]
வருமா [illegible]
திருமறை [illegible]ச்செயல்
வெருவுறப் [illegible]பல விளைத்த தீமையால். (௩௧)

நம்பதி நாங்கையின் னண்ணு பல்லவன்
வெம்பிய வுளத்தினெங் களைத்தை வீட்டினான்
வம்பினி லிறக்தனை மற்றிச் செய்கையா
லிம்பரி னலகையா யிடரின் மூழ்கினம். (௩௨)

அவ்வெலா முரைப்பரி தாடியிற் செய்தவெத்
திவ்விய தவங்கொலோ சேர்த்திறம்மையீண்
டிவ்வயி ராவத வீசன் பூதிநங்
கைவ்வழி யெம்முடற் கதுவப் பெற்றனம். (௩௩)

அனையவெண் ணீற்றின்மாண் பறைதற் பாலதோ
வெனையரும் வல்லுநர் நல்ல நின்னிநீ
நினைபுநீர் செய்யவெதான் றுண்டு நேயர்கா
ளினையுமிவ் வினைநபுத் தெம்மைக் காக்குதிர். (௩௪)

பிதிரரை நன்னெறிப் பெறுத்தன் மக்கடம்
முதுசெய லென்பது மொழிய வேண்டுமோ
கதுமென விப்பெருந் தோட்டக் கண்ணுளா
னிதமிகு சித்தபுங் கவனை யெய்தினீர். (௩௫)

எம்மைவிவ் வுருவிட னிரித்நற் காயதோர்
செம்மைநீர் கேட்டிரேற் செப்பு முள்ளவா
றம்முறை செய்தெம தலக்கண் டீர்த்திரா
லும்மைவேண் டினமென நுவன்ற மன்னைகள். (௩௬)

அதுவினு மையவரு மலலந் தீர்மினீ
ரிதுபொழு தேகிநும் மிடர்தொ லைத்துமேற்
கதிபுக வுய்ப்பதோர் கருமஞ் செய்துமம்
முதலவனை வினுயென மொழிந்து சென்றனர் (கஎ)

சென்றவ ரமலனத் தீசன் சேவடி
நன்றுளத் திருத்தியெந் நவையுந் தீர்ந்தரு
ளொன்றொரு யோகியா யுலகச் சார்பெலாம்
வென்றொளிர் சித்தபுங் கவனை மேவினர். (கஅ)

அவனடி பலமுறை யன்பிற் ருழ்ந்தனர்
கவலுள முகத்தினிற் காட்டி யவ்வெலாம்
பவியமோ டுரைத்தனர் வினுயப் பண்ணவன்
றவலற வவர்முக நோக்கிச் சாற்றுமால். (கக)

அந்தணீர் நும்முனே ரலக்கண் டீர்க்கெனப்
புந்தியாற் சுந்தரே சரனைப் போற்றிமுன்
சிந்துவின் மூழ்கிநீர் திருவெண் காட்டினின்
முந்துறு வடநிழற் சிராத்த முற்றிமேல். (௨௦)

ஆங்குறு கணேசபா தத்திற் பிண்டமுய்த்
தோங்கருட் பிரகசா யகியெம் மூத்தமி
பாங்கனைச் சிதவனப் பரனைப் போற்றியே
நீங்குரு தடுத்தநா ளுணவு நீங்குமின். (௨க)

பூருவ திக்கிற்போ தாய னேசனைச்
சாருமங் கியினிற்ருன் ருேன்றி யீசனை
யேருறு தென்றிசைக் கோத மேசனை
யோருந்தென் மேல்வலம் புரத்து ளீசனை. (௨உ)

நவில்பர தீசியி னுக நாதனை
யிவர்தரு காற்றிசை மதங்க வீசனைத்
திவளுதீ சியினில்யோ கேச னைத்திற
லவிர்வட கிழக்கிலிவ் வத்தி யீசனை. (௨௩)

அருச்சனை விதிமுறை யாற்றி யன்பினுற்
கருத்தயி ராவதே சன்றன் காண்மலர்ப்
பொருத்துபு சந்நிதி புகூஉப்பஞ் சாக்கர
வருச்செப மயுதநீ ருனுற்றல் வேண்டுமால். (௨௪)

இவ்வகை புரியினும் பிதிர்க்க ளெவ்வநீத்
தவ்வருட் கயிலைபுக் கமர்வ ரென்றனன்
செவ்விதி னவனடி பணிந்து சென்றவ
ரைவரு மவ்வகை மரபி னுற்றினர். (௨௫)

அரியவந் நோன்பயி ராவ தேச்சுரன்
றிருமுன முடித்தருள் பெற்ற சீர்மையாற்
பிரமராக் கதவுருப் பிதிர்க ணீங்கியே
சுரர்தொழக் கயிலையிற் றுன்னி வாழ்ந்தனர். (சசு)

பெருந்தவம் புரிந்தவிப் பிரர்க ளாவரு
மருந்துணை வன்னயி ராவ தேச்சுரன்
மருந்துற பூரருண் மாண்பி னுலெழி
பிருந்துசற் புத்திரச் செல்வ மாதிய. (சஎ)

இம்மையி னின்பெலா மெய்தி வாழ்ந்தன
ரம்மைவா னின்பமு மனுப வித்தன
ரும்மையின் வினையெலா மொருவப் பெற்றனர்
செம்மையிற் சிவபுரஞ் சென்று வாழ்ந்தனர். (சஅ)

இத்திற னென்றுகொ லினைய பற்பல
மெய்த்தரு பூதியின் மேன்மை தேற்றுவ
வுத்தம நீறுதா ரணமொ ழிந்துசெ
யெத்திறச் செயலினும் பலனென் றின்றரோ. (சகூ)

ஆதலிற் பூதிதா ரணத்த யர்ப்பிலார்
மேதைய ரெவ்வெவச் செயலும் விக்கின
நாதனை யிறைஞ்சியே நடத்து வோர்களும்
பூதிதா ரணமுதற் போற்றி யாற்றுவார். (ருo)

ஐங்கர னருளுமென் றடிவ ணங்கியித்
துங்கநீ றிடார்களாய்த் தொடங்கி னச்செயற்
பங்கமே புரியுமப் பரனு மாதலி
னங்கவ னருளுமிக் காப்பி னுகுமால். (ருக)

எங்கணு மெவருந்தன் னிறைஞ்சி னேதொடங்
குங்கரு மம்முடிக் குதலைமேற் கொளும்
புங்கவன் றானுமிப் பூதி நோக்குமே
லிங்கிதன் பெருமையா ரியம்ப வல்லுநர். (ருஉ)

என்றுமா மலயவெற் பிருக்கு மாதல
னன்றுமா தவர்வினுய் நயக்க வோதினு
னொன்றிய சிந்தையீ ருணர்மி னென்றுநேர்
துன்றுமா முனிவர்க்குச் சூதன் சொற்றனன். (ருங)

திருநீற்றுச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (எகஅ)

# மூகசுவிச் சருக்கம்

சகத்தியன் மொழிக ளெல்லாந் தலைக்கொள வினிமை வாய்ந்த
சுகத்தியன் மொழிதான் மேன்மைத் தூயசெந் தமிழே யென்றம்
பகத்திய னுதலீ சன்பாற் பயின்றுல கெல்லா முய்ய
வகத்திய வியனூ றந்தோ னருந்தவர்க் கருளிச் செய்யும். (க)

இந்திய நெறிக ணீத்தவ் விந்திய னெறிக்கொள் வேணி
நந்தியங் கழல்கள் பாச நந்திய வன்பர் சென்னித்
தந்திய லருளே நல்குந் தந்தியங் குரித்தோன் பாத
முந்திய வன்பிற் போற்று முதுதவ முனிவிர் கேண்மின். (உ)

அணிநிகழ் பெருந்தோட் டத்தி னணிமையோர் பதியில் வாழ்வோன்
கணியுருத் திரசன் மாவென் கவின்பெயர் மறையோன் றன்கண்
மணியென வருளாற் பெற்ற மைந்தர்க ளவர் தம்மு
ணணியவக் கனிட்ட னீசா னப்பெயர் வகிக்கப் பெற்றோன். (௩)

அன்னவீ சானன் வாய்மை யருந்தவ நிந்த னாதி
முன்னுரை வாக்கின் றோட முதிர்வினைச் சார்பி னானே
யென்னுரை செய்கே மற்றை யின்குண மெல்லாம் வாய்ந்து
முன்னல்வாக் குரைக்கொ ணாம வூமையா யுற்றா னந்தோ. (௪)

தனையன தூமை நீங்கத் தந்தைமந் திரமுன் மூன்று
வினைநனி புரிந்து மூகம் விலகுறா மையினி னைந்து
முனைவினை தபுத்தி யார்க்கு முன்னிய நல்கு மங்கைக்
கனியயி ராவ தேசன் கழலெனக் கடைப் பிடித்தான். (௫)

அன்னதே துணிவாக் கொண்ட வத்தனத் தனயற் கொண்டு
பொன்னகர் சமழ்க்குஞ் செல்வப் புகழ்ப்பெருந் தோட்ட மேன்மை
முன்னினன் கடிது சென்று முன்னுறு முனிநீர்த் தத்தின்
மன்னுசங் கற்பம் பேசி மைந்தனோ டாடிப் பின்னர். (௬)

பூதிகண் டிகைகள் பூண்டு போற்றுறு நியம முற்றிச்
சோதியைந் தெழுத்து மெண்ணித் தூலலிங் கத்தைத் தாழ்ந்து
மூதெயி லத்தி சத்துண் முன்னியைங் கரனெம் பெம்மான்
பாதமுன் னிறைஞ்சி யுட்கோள் பகர்ந்திடர் பாற்றல் வேண்டி. (௭)

ஒப்பிலா முலையெம் மன்னை யொண்பதம் பணிந்து போற்றி
முப்புரம் பொடித்தும் மூவர் முருங்கிடா தமர்ந்த தொன்றோ
வெப்பகற் றருளா னந்த வெள்ளந்தோய்ந் தொளிர்பே ரின்பே
துப்புற வருளிச் செய்த தூயவத் தீச்சு ரன்றன். (௮)

திருமுனம் விரையச் சென்று திருவடி செல்வ னோடு
மொருமையி னிறைஞ்சி யுள்ளத் தூற்றெழு கவற்சி மல்கப்
பெருகுமன் புறநேர் போற்றிப் பிஞ்ஞகா பெருந்தோட் டத்தி
னருணிறை கடலே நாயே னலக்கண்டீர்த் தருடி யென்றான். (௯)

மைந்தனும் வாய்த்தொண் டாற்றும் மாண்பிலா மையினு லுள்ள
நைந்தனன் பெருந்தோட் டத்தி னுதனே நாயே னின்னை
முந்துநூ லோதி யோர்ந்து முதுக்குறை வுற்று வாக்காற்
சிந்தையி னினைந்தாங் கேத்துந் திறனிலாப் பாவி யானேன். (கo)

அருளயி ராவ தேசா வமலனே யடைந்தா ருள்ளந்
தெருளுற வின்னன் முற்றுந் தீர்த்துமேல் வரங்க ணல்கு
மொருபெருஞ் சுடரே நாயே னுறுகண்டீர்த் தருள்வா யென்றே
கருதினன் கண்ணீர் வாரக் கழலினை பலகாற் றாழ்ந்தான். (கக)

இத்தரு ணியற்றி நாளு மியலவிப் பெருந்தோட் டத்தி
லத்தனே யீசா னன்று னருளின்வாய் பேசுங் காறுந்
துய்த்திலே னென்று மென்னுந் துணிவுறு நியமம் பூண்டு
புத்தியாற் பணிந்து நாளும் போற்றியாங் கமர்ந்தான் மன்னோ. (கஉ)

அவ்வழித் திங்க ளோரா றகலவைப் பசிமா தத்திற்
றவ்வலில் பூர்வ பக்கத் தசமியிற் சுந்த ரேச
னெவ்வரித் தருள்வான் வாமத் திமாசலை வீற்றி ருப்பத்
திவ்விய விடைமேற் கொண்டு சென்றெதிர் நின்றா னங்கே. (கங)

கண்டுள மகிழ்ந்தீ சானன் காஞ்சிரங் குவியக் கண்ணின்
மண்டுநீ ரருவி பாய வளருடல் புளகம் போர்ப்பப்
புண்டரீ கத்தா டாழ்ந்தான் பொள்ளென வுமையெம் பெம்மான்
மண்டுபே ரருளான் மூக மாறிவாக் கிறையாய்ப் போற்றும். (கச)

வேறு.

சங்கர புரகர வரகர சிவகர சாந்தவுமா
பங்கர பாலவி லோசன மோசன பாதகபூ
துங்கர தாருட சோம சடேசுர சூலதர
செங்கர பிரகதுய் யான வந்தீசசி வாயநம. (கரு)

புராதன பராபர நிராகர சுராதிப பூசிதனே
கராசல சருமவே காசபு யாசல காமரிபோ
நிராமய புராதிப சராசன வராசல நிகமசுப
சிரோதய பிரகதுய் யானவத் தீசசி வாயநம. (கசா)

கந்தக ணேசுர சனககிர் பாகர காலகர
சுந்தர நாயக வதுலகு சாம்பிகை தோய்வாம
கந்தர நியமணி கந்தர வந்தித கணசால
சிந்தன பிரகதுய் யானவத் தீசசி வாயநம. (கஎ)

சூகர மாயன கோசர பங்கய துங்கபத
சாகர மாகரு ணாகர தாயக சாம்பசிவ
மாகர வாரிச வாசன கோசர மதிநதிசார்
சேகர பிரகதுய் யானவத் தீசசி வாயநம. (கஅ)

பாவன மாதவ பாரிட நாயக பூதபதே
பூவன மாமண மாமென வேநிறை பூரணனே
தேவன நீறணி தேகசம் யாகமெய் தேற்றுமுடிச்
சீவன பிரகதுய் யானவத் தீசசி வாயநம. (௧௯)

சீதர மானய னும்புய பூசித திவ்வியசீ
பாதச ரோருக நேமிசு தாயக பாரதிசார்
வேதன சேகர பேதக ராங்குளி மென்னகவேற்
சேதன பிரகதுய் யானவத் தீசசி வாயநம. (௨0)

அரியய னுதியர் வேய்தொடை தாமுணர்த் தாமையினல்
விரிமல ரிதழிகண் கூடுற யார்க்கும்வி ளக்குதலாற்
பிரணவப் பொருள்பிற ரலர்சிவ னேயெனப் பேசரனே
திருவளர் பிரகதுய் யானவத் தீசசி வாயநம. (௨௧)

பவந்தரு புன்மதப் பாழில்வீ ழாதுறப் பண்டுபுரி
தவந்தரு சைவநன் னெறிச்சரி யாதியிற் சார்ந்தவர்பாங்
குவந்தவர் பவந்தெற நிவந்தெதிர் புகுந்துணர் வுறுமுறையே
சிவந்தரு பிரகதுய் யானவத் தீசசி வாயநம. (௨௨)

ஏமசம் யாகச மீதலே தூர்வையி ரும்பைநதி
சோம துரோணகு ரண்டவில் வாதிது ழுத்தியவி
யோமச டாதர நாமபல் லாயிர யோகீச
தேமரு பிரகதுய் யானவத் தீசசி வாயநம. (௨௩)

ஈசச தாசிவ பாசவி நாசவி மாசலேயார்
நேசசு யம்பிர காசந யந்தரு நீள்கருப
வாசசி தம்பர வாசந டேசவ டேசசிவ
தேசமர் பிரகதுய் யானவத் தீசசி வாயநம. (௨௪)

வேறு.

என்று துதித்தான் முகநோக்கி யெந்தை யயிரா வதநாத
னன்று மகிழ்ந்தோ மீசான நமைநீ துதித்த நுதிநோக்கித்
துன்றெந் நாலு மையமனுத் துணையு மறவுட் டுணிந்தோர்ந்து
நின்ற வியாழன் றனையொத்தாய் நீயென் றருளி மேனிகழ்த்தும். (௨௫)

வருதி யீசா னப்பெயரோய் வனப்பாற் கோடி மன்மதரைப்
பொருதி செல்வத் தாற்றனதற் புரைதி தீர்க்கா யுளும்பெறுதி
சுருதி யாக மங்நெறியின் துறைநின் றிகவாழ் வனைத்தெய்திக்
கருதி யீற்றி னம்பதமுங் கைக்கொண் டமர்தி யெனக்கரந்தான். (௨௬)

தன்னேர் வருமா ரருண்மணிவா சகவாழ் வாலோர் முகைவிடை
முன்னே தரச்செய் யத்தீச முதல்வன் றனே நேர்புரிந்த
தன்னே வுணர்ந்து மெப்பொருளு மவனே யன்பர்க் கினிதருளு
மென்னு விறைஞ்சி யிட்டசித்தி யெய்தப் பெறுர்க்கென் னிசைப்பதுவே.

அலசி லின்பக் கடற்படிந்தாங் கனைய வீசா னன்றெழுந்து
தலைவ னயிரா வதேசனரு டன்னை யுன்னி யுன்னிமன
முலையின் மெழுகாய்ப் பெருந்தோட்ட மொருவ லாற்ற னெப்பில்லா
முலைகோ னடிக்கீழ் மனங்கிடப்ப முன்னி னான்றன் மூதூரில். (௨அ)

ஆங்க ணமருங் கல்விநிறை யறிவாற் சிறந்த வீசானன்
பாங்கு பலதேசத் தினும்போய்ப் பார்த்தி பேசர் பண்டிதர்க
ணீங்க லரும்பே ருவகையுற நிறைநூற் பொருள்க ளெடுத்தோதி
யோங்கு பொருள்பற் பலவெறுப்ப வுதவக் கொடுதன் னூர்புக்கான். (௨௯)

இருவே றுலகத் தியற்கையென வியம்பு பனுவற் பொருட்கிலக்காய்
மருவா வீசா னன்னனைய வகைய கல்வி செல்வநிறை
பொருளா லுலகிற் பிறரெவரும் பொருவா நிலையா லெழில்குணத்தாற்
பெருகா நிற்கு நிலையுணர்ந்து பிறங்கு புகார்மா நகர்க்கரசன். (௩௰)

நாக வன்மா வென்பான்றன் னலங்கூர் சுதைகோ மளையொத்த
பாக முடையா ளாதலினப் பரவீ சான வேதியற்கே
தாக முறநாங் கொடுத்துமெனத் தானே வேண்டி மரபினளித்
தோகை யுறவம் மருகேதன் னமைச்சு மாக வுடன்கொண்டான். (௩௧)

மருக னாகி யனியுரிமை யமைச்சு மாகி வயங்குறுமப்
பொருவி றிறலீ சானனுமப் புவிவேந் தளித்த சிறத்தினுஞ்சீர்
பெருகப் புரந்து வருநாளிற் பிறங்கு கல்வித் திறத்தினால்
விரவு சமயா தீதமாய் வேதா கமநூற் றுணிவினதாய். (௩௨)

சீல ரெவர்க்கு மெஞ்ஞான்றுந் திரும்பா வீடு தருவதாய்ப்
பாவு சமய மெவற்றினுமு பாதி யிலதா யவைதன்கீழ்
மேவு முறையிற் சோபான விதத்தவாகத் தழீஇக் கொண்டு
தாவி லாது நின்றொளிர்சுத் தாத்து விதசித் தாந்தமென. (௩௩)

உலகெ லாமு முள்ளபடி யுணர்ந்து சென்னி மேற்கொள்ளுந்
திலக மாகுஞ் சைவநெறித் திறனே யாண்டுந் திகழவளர்த்
துலவு மேனை யுள்ளீடில் லுவலை மதங்க ளொழித்தென்றுந்
தலைவ னயிரா வதநாதன் சார்போர் சிறிது மறவானாய். (௩௪)

இம்மை நெடுநாட் கோமளையோ டின்புற் றமர்ந்து வினையுலப்பச்
செம்மை தருவான் சிவனடிக்கீழ்த் திகழ்பே ரின்புற் றமர்ந்தானென்
றெம்மை யருண்மா மலயமுனி யிசைப்ப மகிழ்ந்தார் மாதவரென்
றம்மைத் தவத்தா னுயர்சூத னுரைத்தா னுறுவ ருளங்களித்தார். (௩௫)

மூககவிச்சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௭௫௩

## வாரணேசச் சருக்கம்.

நதிமதி யிதழி வேணி நாதனைப் போற்றும் பேற்றி
னாதிகமெய் யடியார்ப் போற்றி ரகசியத் தவனே சொற்றான்
றுதிதா வெனவெண் ணென்பான் றொண்டர்மான் மியவி லாசங்
கதிபெற வுலகு செய்த கனிதமிழ் முனிவன் கூறும். (க)

திருந்துமா தவத்தீர் கேண்மின் றிருப்பெருந் தோட்டத் தென்றும்
பொருந்திவாழ் பரம்ப ரைச்சீர்ப் புனிதாத்து விதசித் தாந்த
வருந்துணைச் சைவ வேளாண் குலத்திலங் நாட்கார் காத்த
பெருந்துணை மரபில் வந்தோன் பெருஞ்செல்வ னொருவ னுள்ளான். (உ)

அன்னவன் கனக நாம னறத்துளில் லறமே யேனைத்
துன்னுமூ வர்க்கு நன்மைத் துணையெனு மெய்ந்நூ லோர்வா
னன்னிலை யறமே பூண்டவ் வறநெறி வழாம லோம்பி
மன்னயி ராவ தேசன் மலரடி வழுத்தி வாழ்வான். (ங)

குருவிலக் கணமுற் றோர்ந்த குரவனை வழிபட் டேத்தித்
தெருள்சிவ தீக்கை வாய்ந்து சிவார்ச்சனை நியமம் பூண்டு
மருளறு முளத்த னாகி வாழுநாள் வார ணேசன்
றிருவரு ளதனாற் பெற்றான் றிகழ்மணி யெனவோர் சேயை. (ச)

அன்னவன் குழவிக் காம்பே ரருளயி ராவ தேசன்
றன்னடி மறவா வாய்மைச் சார்பினால் வார ணேச
னென்னவைத் தழைத்தா னந்த விளஞ்சிசு தன்பா லீச
னின்னருளென்ன நாளு மெழின்மிக வளர்ந்த தம்ம. (ரு)

வளர்தரு குமரன் பிள்ளை மைப்பரு வத்திற் றானே
பளகறு குரவன் றன்பாற் பலகலை யாய்ந்து தேர்ந்து
கிளர்திரு வருள்கை கூடக் கெழீஇயயி ராவ தேச
னளவறு மாண்பு தேர்ந்தாங் கவனடிக் கன்பே பூண்டான். (சா)

அத்தகு வார ணேச னடைந்துதன் குலாசான் றன்பாற்
பத்தியிற் றீக்கை பெற்றுப் பரசிவார்ச் சனைமேற் கொண்டு
நித்தலு மன்பு கூர நிகழ்த்துவான் றன்கு லத்தோர்
சித்திரப் பாவை யன்ன சேயிழை தன்னை வேட்டான். (எ)

அருந்ததி யனைய கற்பி னாயிழை யவளோ டில்லிற்
றிருந்துநூன் முறையின் வாழ்நாட் சினவிடை வார ணேசன்
முருந்தன முறுவ லொப்பி லாமுலை யுடனன் பால்வீற்
றிருந்தருள் சினக ரத்து ளென்றுஞ்சென் றுறுவா னோர்நாள் (அ)

அருளுமத் தீச னென்று மமர்ந்தரு ணிகேத னந்தான்
பொருளிலா ரில்லம் போலப் புனைதரப் பெருமை லந்தோ
தெருடரு மிடங்க ளெல்லாஞ் சீரண மாகக் கண்டு
மொருசிறு கவலு மின்றி யொழித்தனன் பன்னா ளையேன். (கூ)

உலகெலா முடைமை யாக்கொண் டுயிரெலா மடிமை யாக்கொண்
டலகிலா வரங்க ணல்கு மண்ணணம் வார ணேசன்
கிலமதா மிடத்தி ருப்பக் செழுமணி மாட மேவிப்
புலனெலா நுகர வாழ்ந்தேன் புன்மையே னென்செய் தேனே. (௧௦)

அன்புளேன் போலப் பன்னா ளருச்சனை செபந்தி யான
மென்பன புரிந்தேன் யாரு மெனைநன்கு மதித்தற் கன்றிப்
பின்பய னுறற்கென் றுமோ பேதையேன் பிரான்பாற் செய்யு
மன்பெனும் பின்பு சாரு மந்தகற் கிசைப்ப தென்னும். (௧௧)

புதிதினோர் சிவால யஞ்செய் புண்ணிய பலனிற் கோடி
யதிகமாம் புராத னத்தி னும்பழு தறத்தி ருத்து
மிதமிஃ தெல்வாற் றுனு மியற்றுதற் காற்ற லுள்ளார்
துதியுறப் புரிந்தி டாரேற் றுன்னுவர் சிவத்து ரோகம். (௧௨)

அன்னதா னீங்காத் துன்பே யடைவரப் பணிபு ரிந்தோர்
முன்னுறு மிட்ட சித்தி முற்றும்பெற் றொருவீட் டின்பும்
பின்னுறு வாரென் றோதும் பிரானருள் சிவாக மங்க
ளென்னநின் றுய்ந்தாய்ந் தேங்கி யிலங்குமக் நீச்சு ரன்றன். (௧௩)

திருமுனம் பணிந்து போற்றித் தேவதே வீச னேநின்
பெருநிகே தனங்கி லங்க ணீங்கிமுன் பெற்றி போலப்
பொருவிலா தொளிர்வா னுயேன் புதுக்குபு தரிசித் துய்வா
னருளுதி யென்ன வேண்டி யகன்றுதன் மனையிற் புக்கான். (௧௪)

அன்னதே கவலை யாப்பேழ் கணித்தமர்ந் தனனுங் கண்ண
றன்னடிக் கன்பர் துன்பஞ் சகித்திலான் கணமுந் தாழா
னின்னலங் குடனே மாற்றி யின்பருண்ம் மென்ப தோர்ப்பா
னன்னரவ் வார ணேசன் கனவிடை நண்ணிக் கூறும். (௧௫)

வருதிநம் பான்மெய் யன்ப வயங்குநந் தளிபு துக்கக்
கருதிநீ வருந்து முள்ளக் கவற்சியை யொழிதி யீண்டுத்
தருதுமோர் முத்த மன்ன தாளத்தை நம்போற் பாவித்
தொருவற நாளும் பூசித் துறுதிநீ யுறுதி யீதே. (௧௬)

நீன்னுளத் தெண்ணி யாங்கெந் நிகேதனம் புதுக்க லாதி
நன்னிலை புரிதற் காக நயந்திடு பொருள்க ளெல்லா
மிந்நிலை முத்த மொன்றே யென்றுநிற் களிக்குங் கோடி
யென்னவங் கைக்கொ டுத்தா னிலங்குமந் நித்தி லத்தை. (௧௭)

தன்றிரு வருளைத் தானே தவலறத் திரட்டி யீந்தா
னென்றறி வாளர் கூற யீந்தவந் நித்தி லத்தை
நன்றிரு கரத்தா லேற்று நமந்துளத் துவகை பொங்க
நின்றனன் வார ணேச னிமலன்மே லருளிச் செய்யும். (௧௮)

அன்பரீ யினைய முத்த மருள்பொருள் கொண்டு கோயி
லன்புறப் புதுக்கி மேலு நயந்தபல் லறம்பு ரிந்து
பின்பெம துலகஞ் சார்ந்து பிரிவற வடிக்கீழ்ச் சார்பே
ரின்பமுற் றமர்வா யீற்றி லிம்முத்தங் கடலி லுய்த்தி. (கக)

தாரணி வியக்கு முத்தந் தருதலா னம்பேர் முத்த
வாரணே சன்னென் றெங்கும் வயங்குக நினக்கு மைந்த
சீரருள் புரிந்த மேடத் திங்கண்முற் பக்கந் தன்னிற்
சாரிரண் டாந்தி திக்கட் சார்ந்தெமைப் பூசிப் போர்க்கு. (உ0)

தனதனிற் சிறந்த செல்வஞ் சந்ததி முதற்பே றெல்லா
மினிதருள் புரிது மென்றுங் கிறைமறைந் தருளி ஞனைப்
புனிதனும் வார ணேசன் பொள்ளென விழித்துக் கையி
னதிதிகழ் முத்துங் கண்டு நவிலரு முவகை கூர்ந்தான் (உக)

எந்தைநம் முத்த வார ணேசனீண் டெளிய னேற்குத்
தந்தபே றருளென் சொல்கேன் றுயினு மினியா னென்றே
முந்துநா லுரைப் பதங்கை முத்தினுந் தெளிந்தே னென்றான்
அந்திவான் மதிமி லேச்சு மண்ணலைத் தொழுதான் பல்கால். (உஉ)

இந்துசே கரனேர் தந்த விந்தினு மொளிரு முத்தை
முந்துமான் மார்த்த லிங்க மாக்கொடு மூன்று போதும்
புந்திசெய் தன்பி னித்த பூசனை புரிந்து நாளுந்
தந்திர மரபி னைமித் திகங்களுஞ் சமைப்பான் மேலும். (உ௩)

பூசனை முடிவி லந்தப் புனிதவான் முத்த லிங்க
வாசனை நேர்நின் றன்பின் வழுத்துவான் வழுத்துங் காலே
தேசனை வருக்கு நல்குஞ் சிவனரு ளாலம் முத்தின்
னேசனை யாத ளிக்கு நிறைபெருள் கொண்டு வப்பான். (உ௪)

மறுவறு முளத்து வார ணேசன்மா நேச னெங்கு
நிறையயி ராவ தேச னிகேதனம் புதுக்க நூலின்
முறைதெரி சிற்பர்க் கொண்டு முன்புசீ ரணமா யுள்ள
குறைகளோர் சிறிது மின்றி முன்னிலுங் குலவச் செய்தான். (உரு)

இத்தகு கோயிற் றென்மேற் கினிலமர்ந் தென்றும் வேண்டு
மெத்தகு பொருளு மன்பர்க் கினிதெளி துறுமா நல்கு
மெய்த்தகு திறல்வா தாடு விநாயகா லயமும் வாய்மைப்
பத்தியிற் புதுக்கி மேலும் பண்புற விளக்கி னுனல். (உசா)

ஆங்குள தீர்த்த மான வணிமலர்த் தடங்க ளெல்லாம்
பாங்குறத் திருத்திச் சூழும் படித்துறை யாதி பண்பி
னோங்குற விளக்கி மேலு முறுபணி பலவும் பாசத்
தீங்கறு வார ணேசன் றிருந்துறப் புரிந்து வந்தான். (உஎ)

# யோக்கியதா பத்திரம்.

வ. மு. இரத்தினேசுவரையர்.

இவரை நான் நன்கு அறிவேன். இவர் அடக்கமும், ஒழுக்கமும் உள்ளவர். இவர் வண்ணார்பண்ணைச் சைவப் பிரகாச வித்தியாசாலையில், என்னிடம் சிற்சில இலக்கண இலக்கிய நூல்கள் கற்றவர். இவர் தாங்கற்ற நூல்களைக் கற்பிக்க வல்லவர்; பிரசங்க சாதுரியமுடையவர். இவர் செய்யுள் செய்யும் ஆற்றலும் அமையப் பெற்றவர்; வாக்கியங்களைத் தொடுத்து அணிமையுற எழுதவும் வல்லவர். சித்தாந்த சாத்திரப் பயிற்சியும் இவருக்கு உண்டு.

பிலவங்க-ஹ ஆவணி-மீ கரு-உ

அ. குமாரசுவாமிப்பிள்ளை,
சுன்னாகம்.

சிவமயம்.

யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்

வித்துவசிரோமணி

# அ. குமாரசுவாமிப்புலவர் சரித்திரச் சுருக்கம்.



புண்ணிய பூமியாகிய ஈழமண்டலத்தின்கணுள்ள செந்தமிழ் நாடாகிய யாழ்ப்பாணத்துச் சுன்னாகத்திலே சைவ வேளாண் குலத்திலே முத்துக்குமார கவிராயர் என்பவர் ஒருவர் இருந்தார். இவர், உடுவில் சந்திரசேகரர் மரபிலே உதித்தவர். சி. வை. தாமோதரம் பிள்ளைக்குத் தமிழாசிரியரும் இவரே. இவர்—முத்தகச் செய்யுள் செய்யும் வித்தகமுடையவர். ஞானக்கும்மி என்ற நூலும் முத்துக்குமார கவிராயர் செய்ததே! இவர் செய்த சித்திரக்கவிகள் இருபத்தைந்து "முத்தக பஞ்ச விஞ்சதி" என்னும் பெயருடன் வெளிவந்திருக்கின்றன.

இம்முத்துக்குமார கவிராயரின் சகோதரர் சின்னத்தம்பியார். சின்னத்தம்பியாருக்கு அம்பலவாணர் என்னும் பெயருடைய புத்திரரொருவர் இருந்தார்: இவர் சைவாசாரத்திலும் ஈசுவர பத்தியிலும் சிறந்து விளங்கியவர். இதனால், இவரைச் "சைவ அம்பலவாணர்" என்று அழைப்பது வழக்கம்.

இந்த அம்பலவாண பிள்ளைக்குச் சிதம்பரம் என்னும் மனைவியார் வயிற்றில் பிறந்தவர், குமாரசுவாமிப் புலவர். இவருக்கும் சின்னத்தம்பியார் என்பது பிள்ளைத் திருநாமம். குமாரசுவாமிப் புலவர் ஜனன விவரம் வருமாறு:

ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகாப்தம் ௧௭௭௫-க்குச் சரியான பிரமாதீச-வருஷம் தை-மீ ௧௮-உ ஆதிவாரம் முற்பகல் நி௨ அடிக்கு அம்பலவாண பிள்ளைக்குப் புத்திரன் ஜனனம்.

| | | | |
|---|---|---|---|
| | ல<br>சனி | ராகு | |
| வெ | ராசி சக்கரம் | | குளிகன் |
| சூ. சந்<br>புதன் | அவிட்ட நட்சத்திரம். | | |
| குரு | கே | | செ |

குமாரசுவாமிப்புலவர், உரியகாலத்திலே வித்தியாரம்பஞ் செய்யப்பெற்றுக் கல்வியைக் கசடறக் கற்று வந்தார். இவர், இளமையிற்றொடங்கியே கூரியமதியும்—சீரிய செயலுமுடையவர். இவர் இலக்கண இலக்கியங்களை—அவ்வூர், பூ. முருகேச பண்டிதரிடம் சந்தேக விபரீதமின்றிக் கற்றவர்; ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்களிடம் சிற்சில நூல்கள் கற்றவர்; நாவலரவர்களால் நன்கு மதிக்கப்பட்டவர். இவர், சம்ஸ்கிருத பாஷையிலும் அதிக சாமர்த்தியமுள்ளவர்; வடமொழியை, அ. நாகநாதபண்டிதரிடம் படித்தவர். நாகநாத பண்டிதரை (Woodar) உவூட்டர் என்று கூறுவர். சங்கர பண்டிதரிடமும் சங்கதமொழியிற் சிற்சில காவியங்கள் கற்றவர் ஈமது புலவரென்ப. குமாரசுவாமிப்புலவர், இலக்கணம், இலக்கியம் என்ற பகுப்புள்ள பரந்த பல நூல்களையும் செவ்விதாக உணர்ந்தவர்; சங்கத மொழியிலுள்ள நூல்களைத் தக்கவாறு ஆராய்ந்து படிப்பதே கருத்தாகவுள்ளவர். சங்கதம்—சம்ஸ்கிருதபாடை.

இவ்வித கல்விக்களஞ்சியமாகிய இவர் தம்மை "பிள்ளை" என்று எழுதுவதேயன்றிச் சிறப்புப் பெயர்களைக் கூட்டித் திறம் பட எழுதாத தகுதியுடையவர் என்பது யாவருமறிந்த உண்மையேயாகும். இவரது கல்வியறிவு நுட்பம் நோக்கிக் கல்வித்துறையின்கரைபோகிய புலமையோர், இவரை—புலவர்—சிரோமணி என்று அழைப்பாராயினர்.

இவர்—தாது-ஹூ முதல் தமது தமிழாசிரியராகிய முருகேச பண்டிதருடன் ஏழாலைச் சைவ வித்தியாசாலையில் கல்வி கற்பிக்கும் ஆசிரியரானார். சில வருடங்களின் பின்பு நீதிபதி கதிரைவேற்பிள்ளையுடன் அகராதி எழுதுவதற்கு இவரும் உதவியாக இருந்து பற்பல அரிய வார்த்தைகளுக்குப் பொருள் காணச் செய்தார்.

அப்பால் இவர் சுபகிருது-ஹூ முதல்—நாவலரவர்களால் தாபிக்கப்பட்ட, வண்ணார்பண்ணைச் சைவப்பிரகாச வித்தியாசாலையில் பிரதமாசிரியராக இருந்து பல மாணாக்கர்களுக்குக் கல்வி கற்பித்து வருவாராயினர். அக்காலத்தில் அங்கே சென்று கல்வி கற்றோருள்ளே யானும் ஒருவன்.

இலங்கையிலும் இந்தியாவிலும் இப்புலவர் பெருமானின் கல்வித்திறமை அறியாதாரில்லையென்று திடமாகச் சொல்லலாம். யாழ்ப்பாணத்திலே செந்தமிழ்ப் புலவர்கள் சிலரே இருந்தாலும் இவரது நூலாராய்ச்சியும், நுண்மாண் புலமையால் போலிப்புலவர் செய்யும் நூலுரைப் பிழை காணும் ஆற்றலும், மாணவர்மாட்டுக் கருணை வைத்துக் கற்பிக்கும் பொறுமையும் வியக்கத் தக்கதாயிருந்தன. இவருக்கு இலங்கை அரசாங்கத்தவரும் இருநூற்றைம்பது (உ௱ருய) ரூபாய் சம்மானஞ் செய்தனர்.

யாழ்ப்பாணத்துத் தமிழ்ச்சங்கம், மதுரைத் தமிழ்ச்சங்கம் ஆகிய இருசங்கங்களிலும் வடமொழி தென்மொழிகளாகிய இரு மொழிகளும் பிரகாசிக்கும்படி செய்த இப்புலவர் பெருமானிவரென்ப.

குமாரசுவாமிப்புலவர் நாமதேயத்துடன் வெளிவந்த நூல்களும் பல; சிறப்புப்பாயிரங்களும் பல; ஸ்தோத்திரச் செய்யுட்களும் பலவாகும். விரிவஞ்சிச் சிற்சிலவற்றை இங்கே குறிக்கின்றேன்.

௧. நீதி நெறி விளக்கப் புத்துரை.

௨. இலக்கண சந்திரிகை.

௩. இரகுவமிசக் கருப்பொருள்.

௪. சதாசாரக் கவித்திரட்டு.

௫. ஏகவிருத்தபாரதாதி. (இதில் விநோத சித்திர வினுவுத்தரக் கவிகளுஞ் சேர்ந்திருக்கின்றன).

௬. சாணக்கிய நீதி வெண்பா. (இது ஔவை பாடல் போன்ற சுவையுடையது).

௭. மூத்தக பஞ்சவிஞ்சதி.

௮. வினைப் பகுபத விளக்கம்.

௯. மேகதூதக் காரிகை.

௰. சூடாமணி நிகண்டு (முதல் இரு தொகுதிகள் சொற்பொருளுடன்)

௧௧. அகப்பொருட் புத்துரை.

௧௨. தண்டியலங்காரப் புத்துரை.

௧௩. யாப்பருங்கலக் காரிகைப் புத்துரை.

௧௪. இலக்கியச் சொல்லகராதி.

௧௫. தமிழ்ப் புலவர் சரித்திரம்.

௧௬. உரிச்சொனிகண்டு.

௧௭. ஆசாரக்கோவை.

௧௮. மறையந்தாதி—அரும்பதவுரை.

௧௯. கலைசைச் சிலேடை வெண்பா—அரும்பதவுரை.

௨௰. இராமாயணம்—பாலகாண்டம் (மூலபாட திருத்தமும் அரும்பதவுரையும்)

உக. இதோபதேசம்.

உஉ. ஞானக்கும்மி.

உங. அத்தியடி விநாயகரூஞ்சல்.

உச. பழமொழி விளக்கம்.

உரு. நகுலேசுவரரூஞ்சல்.

உசு. மாவைப்பதிகம்.

உஎ. சிசுபால சரிதம்.

உஅ. இராமோதந்தம். முதலியன.

இவற்றுள்ளே, இவ்வித்துவசிரோமணியினது இலக்கண வன்மையை—வினைப்பகுபத விளக்கம், இலக்கண சந்திரிகை முதலியன, காட்டும்; அநுசிலனைத் திறமையைத் தண்டியலங்காரப் புத்துரை, யாப்பருங்கலகாரிகைப் புத்துரை, இராமாதாரம் முதலியன விளக்கும்; நூலாராய்ச்சியாலுண்டாகிய அறிவின் விசேஷத்தை நிகண்டுச் சொற்பொருள்—இலக்கியச் சொல்லகராதி முதலியன துலக்கும்; வாக்கியத்தொடை நயத்தைத் தமிழ்ப்புலவர் சரித்திரம், சிசுபால சரிதம் முதலியன தெரிக்கும்; வடமொழி நூல்களை மொழி பெயர்க்குஞ் சதுரப்பாட்டை மேகதூதக்காரிகை, சாணக்கிய நீதிவெண்பா, மேற்காட்டிய சிசுபால சரிதம் முதலியன புலப்படுத்தும். இவரது சித்தாந்த நூலுணர்ச்சியைப் பிரசங்கங்களும், துண்டுப் பிரசுரங்களும் இனிது வெளிப்படுத்தின. இன்னும், இப்புலவர் திலகர் காடிந்யமான பதங்களை நன்கு விளக்கியும், பிழைபட வரையும் ஆங்கிலக் கல்வியறிவுடையார் வியாஸங்களைக் கண்டித்தும்—மதுரைத் தமிழ்ச்சங்கத்துச் "செந்தமிழில்" அநேக கட்டுரைகளை வெளியிட்டிருக்கின்றார்; வேறு—மாசிக—வார பத்திரிகைகளில் எழுதிய அரிய விஷயங்களும் பலவுள.

இலங்கையில்—இலங்கைநேசன், சைவஉதயபாநு, இலங்காபிமானி, உதயதாரகை, திராவிட கோகிலம் முதலிய செந்தமிழ்ப் பத்திரிகைகளில் அநேக பயன்தரும் விஷயத்திரட்டுகளும், தண்டமிழ் நூல் கண்டறியார் கொண்டுள கருத்தைக் கண்டனஞ்

செய்யும் பற்பல விஷயங்களும், நவரசமும், பத்தழகும் மிருந்து நன்மதி புகட்டுஞ் செந்நெறி வசனத் தொடைகளும், பண்டைக் கால நூலுடையார் கருத்தைத் தண்டாது வெள்ளிடை மலையெனத் தெள்ளிதிற் றெரிக்கும் ஆராய்ச்சி விஷயங்களும் இப்புலவர் தலைவரால் எழுதப்பட்டிருக்கின்றன. இன்னோரன்ன கலாபூஷண பாநுவதந் தைவசக்தியுடையாரென்று கூறவும் வேண்டுமா? "புலவர் என்ற பேரும்" யான் ஈண்டு எடுத்துக் கூறுமே அமையும். இவரது செயற்கருஞ் செயல்களின் திட்ப நுட்பமாதியனவே ஆழ்ந்து யோசிப்பார்க்கு அகமகிழ்வைத் தருகின்றன. இவை நிற்க,

இப்புலவர் பெருமான், சுன்னாகம் என்ற அவ்வூரிற்றானே மயில்வாகனம் பிள்ளை புத்திரி சிங்காரச்சியம்மையாரை விவாகஞ் செய்தார். இவருக்கு—அம்பலவாணர், முத்துக்குமாரசுவாமி என்னும் இரு புத்திர ரத்தினங்களும், விசாலாக்ஷியம்மையார் என்ற ஒரு புத்திரியும் இருக்கின்றார்கள். இவரது தர்ம பத்தினியார் காலஞ் சென்றுவிட்டார். இவருக்குக் காமாட்சியம்மையாரென்ற சகோதரி ஒருவர் இருக்கின்றார்.

இவர், மு. வைத்தியநாதப்பிள்ளை என்னும் பெரியாருடன் அத்தியந்த நண்புள்ளவர்; இந்தியாவுக்கு இவருடன் வந்து பல ஆதீனங்களையும், பல ஸ்தலங்களையும் தரிசித்து மீண்டவர்; மதுரைத்தமிழ்ச்சங்கத்திற்கும் அப்போது விஜயஞ் செய்திருந்து உபசரிக்கப் பெற்றவர். முன்னும் இந்திய யாத்திரை முறையாகச் செய்தவர் என்பர்.

இவ்வித்துவ சிகாமணியிடம் கல்வி பயின்ற மாணவர்களும் பலருளர்; சிற்சில நூல்களுக்குப் பொருள்கேட்டுத் தெளிந்தாரும் பலரே! அநேகர், இவரைக்கொண்டு—தாந்தாம் பதிப்பிக்கும் பழந்தமிழ் நூல்களுக்கும்—புதிதாக இயற்றிய நூல்களுக்குஞ் சிறப்புரை வேண்டிப் பரிசீலனை செய்வித்திருக்கின்றார்கள். இந்தியாவிலுள்ள புலவர்களும் பலர், சிறப்புப்பாயிரம் பெறுதற்காகத்

தத்தம் கருத்தையும் நூல் விஷயங்களையும் இந்தப் புலவர்மாம ணிக்குத் தெரிவித்து மதிப்புரை பெற்றனர். இந்தியாவிலுள்ள சில வித்வான்கள் யாழ்ப்பாணம் பண்டிதர்களோடு மாறுபட்டுத் தருக்குறுதலுமுண்டு. யாழ்ப்பாணமிருந்து வந்த இந்தியவாசிக ளாகிய சில கற்றறி மூடர்களும், தங்களுக்கு வந்த—புலவர், நாவலர், சுவாமிகள் - முதலிய சிறப்புப்பெயர்களால் அகங்கரிப்பா ராயினர். இந்நிலை பூண்டாரெவரும் நமது புலவருடனே எதிர்க்காது தலைகுனிந்து செல்வது வழக்கம். ஆனால், சிலர் புலவரைப் புறங் கூறியும்—எதிருரை விடுத்தும் தங்கள் அழுக்காறாகிய இழுக்காற் றை வெளியிட்டுத் தோல்வியடைந்தனர். "கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்கவதற்குத் தக" என்பது புலவரிடங்கண்ட விசேஷ நிலை யாகும். புலவராலும பழந்தமிழ் நூற்பரிபாலனார்த்தமாகச் செந் தமிழில் அநேக பதங்கள் திருத்தப்பட்டன. குறுந்தொகை, நற் றிணை, பரிபாடல் முதலியவற்றிலும் பற்பல பதங்கள் சுயவடிவம் மாறியனவென்று எடுத்துக்காட்டுடன் விளக்கப்பட்டன.

இன்னும், இவ்வித்துவ நன்மணியிடம் அரியநூல்கள் பலவற் றிற்குப் பொருள் கேட்டுப் பிரக்கியாதி யடைந்தவர்களுள்ளே— புன்னைநகர் வித்துவான் சி. கணேசையர், இலங்கை அரசினர் வித் தியா அபிவிருத்தி நிலையத் தமிழ்ப்பண்டிதரா யிருந்து, தற்காலம் உபகாரச் சம்பளம் பெறும் தென்கோவை ச. கந்தையபிள்ளை முதலிய சிலர் இங்கே எடுத்து எழுதத்தக்க கலாசாதுரியர்களாக இருக்கின்றார்கள்:—காலங்கடந்த சிவானந்தையர் அதிக விவேகி; இவரிடம் இராமாவதாரம், இலக்கணம், தருக்கம் முதலியன கற் றுத் தேர்ச்சியடைந்தவர்.

வித்துவ சூடாமணி யென அறிஞர்கூற இவ்வித உத்தம உத்துங்க சுகுண இலக்கணங்களோடு வாழ்ந்த இப்புலவர்சிகாமணி யிடம் அமைந்த விசேஷ குணங்கள், அகங்காரமின்மையும் உண்மை உரைத்தலுமாம். சிலர், "புலவர் நிரம்பிய அகங்காரியாக இருந்தார்" என்பர். இது அறியாதார் கூற்றென்று மறுக்க. புற

ஆடம்பரம் வேண்டாத பொறுமை சீலமுடையவர் நமது புலவர் பெருமான். பிறரைப்போல இறுமாப்பும் பொய்வேடமும் அற்பமும் இப்புலவரிடங் காணமுடியாது. அதனால்; "நாக்கின் மெலியது மேன்மேலெழச் செல்லச்செல்ல வலிதன்றே தாழுந்துலைக்கு" என்ற ஆப்தர் திருவாக்குக்கு இயைந்த அடக்கமுடையவர் இப் புலவரென்று இங்கே எழுதுவது அவசியமாயிற்று.

இவ்வித செந்நெறி கடைப்பிடித்த இருபெருஞ் செல்வச் சிகாமணியாகிய குமாரசுவாமிப் புலவர், சென்ற தர்மதி வருடம் மாசித்திங்கள் இருபத்தைந்தாந்தினம் புதவாரம் இராத்திரி இரு பத்து நான்கு நாழிகையளவில் மகர லக்கினத்தில் பரலோகப் பிராப்தி யடைந்தனர். திதி சுக்கிலபட்சத்துச் தசமி. நட்சத்திரம் திருவாதிரை.

இந்த மகானுபாவரது பஞ்சபூத பரிணாம தேகத்திலிருந்து ஆன்மா பிரிந்தமை கேட்டுப் புத்திரர் மித்திரர் மாணவர் முத லிய யாவரும் இவர்பாலுற்ற பற்றுக் காரணமாகக் கவலையுற்றனர். இவருடன் நண்பு பூண்டொழுகிய, த. கைலாசபிள்ளை, மு. வைத் தியநாதப்பிள்ளை முதலிய சிலரே இன்னும் ஆறுதல் கூறித்தேற் றும் பெரியோர்களாக இருக்கின்றமையால், அவர்கள் துணையோடு இறைவனருளைப்போற்றி இன்புடன் வாழ்வோமாக.

(சரித்திரச் சுருக்கம் முற்றிற்று.)



புலவர் இயற்றிய சில செய்யுட்களையும்
இங்கே படிப்பார் பயன் கருதிக் குறிக்கின்றேன்.



### மேகதூதக்காரிகைக் குருவணக்கம்.

தூய மயிலணிச் சுப்பிர மண்யனைத் தூரமச்சி
வாய குருவை முருகேச பண்டித மாமணியைப்
பாய வடகலை தேர்நாக நாதச பாமணியைக்
காய மொழிமனஞ் சேர்த்துது நங்கண்மணிகளென்றே.

### மேகதெரிசனம்.

வாடி மனைவி பிரிவால் வருந்தி மனதிலைதன்
வாடு மியக்கனு நாள்சிரு மாத மகன்றுகண்டான்
ஆடி மதியின் முதலான் தினந்தினி லம்மலைச்சா
ரூடு முகிலினை யுற்காதகேளி யுவாவெனவே.

உற்காதகேளி=மதில்முதலியவைகளிலே யானை கொம்பினாலே குத்தி இடறும் விளையாட்டு. சிந்தாமணி நூலார் "கோட்டுமண்கொளல்" என்பர.

### வழித்துணை கூறல்.

காதார நின்னுரு மேற்செவி கேட்டுக் கனமுகிலே
போதார மானச வாவியி லன்னங்கள் பூமுதலாம்
பாதேய முங்கொடு நின்றுணையாகிப் பாந்துவரும்
மாதாளும் பாகன் திருக்கயிலாச மலைமட்டுமே.

பாதேயம்=பிரயாணிகள் வழிக்கு உதவியாகக் கொண்டுபோகும் உணவு முதலியன.

### இமயமலையிற் றிருவடித் தெரிசனம்.

பொன்மே விமயம் புகுந்திடு நாளிற் புராந்தகனார்
தன்மேல் விளங்க வழுந்திய பாதமுங் கண்டனதி
சொன்மே வியோகியர் நாளுந் தொழுவர் தொழாதவர்யார்
நன்மேக மேயது பாவந் தொலைந்து நலந்தருமே.

வடமொழி மேகதூதத்தின் தமிழ் மொழிபெயர்ப்பு.
காரிகை=கட்டளைக் கலித்துறை.

## நகுலேசுவர ரூஞ்சல்.

இச்சகத்திற் றனைநினைவோ ரிடரை நீக்கும்
  ஏகதந்த விநாயகமுக் கண்ண ரோடு
பச்சைமயில் வாகனனும் பாங்கர் மேவப்
  பண்ணவராம் விண்ணவர்பல் லாண்டு சொல்ல
அச்சுதனுஞ் செங்கமலத் தயனும் வாழ்த்த
  அம்பொன்மய வம்பலத்தி னருளே பூண்டு
நச்சரவக் கச்சசைத்து நடன மாடும்
  நகுலகிரி நாயகரே யாடீ ரூஞ்சல்.

நகுலகிரி யென்றது தமிழில் "கீரிமலை" என்று வழங்கப்படுகிறது. இஃது ஒரு புண்ணிய தீர்த்தமுள்ள இடம்.

## சி. வை. தாமோதரம்பிள்ளையை வியந்தது.

ஏட்டி லிருந்த வருந்தமிழ் நூல்க ளெனைப்பலவும்
ஈட்டி வழுக்களைந் தச்சினி லாக்குபு செந்தமிழ்சேர்
நாட்டி லளித்துயர் தாமோ தரேந்திர னண்ணுபுகழ்
பாட்டி லடங்குந் தகைத்தோ புலவர்கள் பாடுதற்கே.

கலித்தொகை-வீரசோழியம்-இலக்கணவிளக்கம் முதலிய அரியநூல்களை வெளியிட்டவர், இத்தாமோதரம்பிள்ளையே யாவர்.

## திருவாவடுதுறை சென்றபோது பாடியது.

தேவார மாதி யருட்பெருஞ் செல்வர் திருமுறைகள்
நாவார வோதிக் குலசையிலுங் கூரிய நன்மதியார்
பாவாண ருக்கொள நற்பொரு ளாய்ந்து பகர்ந்தமிழ்
கோவே நமோநம அம்பல வாண குருமணியே.

## நாவலரவர்கள்மீது சொல்லிய வினாவுத்தர வெண்பா.

ஐந்தின்பின் னுவதென்ன? ஆனனத்தின் பேரென்ன?
முந்து நடுவின மொழியென்ன?—இந்திரற்கு
மாறுகொண்டோன் பேரென்ன? வாக்கின் மிகவல்ல
ஆறுமுக நாவலனே யாம்.

## வடமொழி மொழிபெயர்ப்பு.

மாந்தா தாசமஹீபதி: க்ருதயுகா லங்கார பூதோகத:||
ஸேதுர்யேநமஹோததௌ விரசித: க்வாஸௌ தசாஸ்யந்தக:||
அந்யேசாபி யுதிஷ்டிரப்ரப்ருதயோ யாதாதிவம் பூபதே
நைகேநாபி ஸமங்கதா வசுமதீ நூநம் த்வயாயாஸ்யதி||

முந்தேறு கிருதயுக பூபதிமாந் தாதாவு முடிந்து போனான்
நந்தேறு கடலடைத்த செயராமச் சந்திரனு நடந்துவிட்டான்
வந்தேறு சருதலைத்துக் கருமன்முதற் பலமகிபர் மடிந்துபோனார்
அந்தோவிங் கிவரொடுபோ காதபுவி நின்றனைத்தா னடையுமையா

## இராமோதந்தம்.

பூவின் மேம்படு வண்மிக முனிவரன் புகன்ற
காவி யந்தனைச் சுருக்கிய கட்டுரை யிராமன்
மேவு தந்தநற் றமிழினிற் கவிதையாய் விளம்பத்
தேவ னங்கரன் கரிமுகன் சேவடி பணிவாம்.|வ

இராம + உதந்தம்; உதந்தம் = சரித்திரம்.

வாவிநீர் சூழும் பஞ்சவடியிடைத் தனது கையால்
ஆவிபோன றினிய தம்பி யாக்கிய பன்னசாலை
தேவியுந் தானு மாகச் சென்றுவீற் றிருந்தா னென்ப
தேவர்தந் துயர நீக்கத் திருவவ தாரஞ் செய்தோன்.

முன்னவனோ டும்பகைத்து மூதுணர்ந்த வீடணனும்
பின்னவனுஞ் செயராம பிரானருகில் வந்தணைந்தான்
அன்னவனை யினியிலங்கைக் கரசாக வபிடேகஞ்
சொன்னமுறை யாற்புரிந்து தூயவனும் வைத்தனனே.

வாழி யந்தணர் மன்னவர் பின்னுளோர் மறைகள்
வாழி மாமுகி லறநெறி வைதிக சைவம்
வாழி செந்தமி ழிலக்கிய லக்கண வரம்பு
வாழி ராகவன் பெருங்கதை மாநிலத் தினிதே.

## ஏகவிருத்த ராமாயணம்.

தாதையார்சொல ராமன் காடு போதல்
சார்ந்தபொன் மானெனுமா ரீசன் சாதல்
சீதையார் பிரிவெருவை மரணம் பானு
சேயொடுநட் புக்கோடல் வாலி வீடல்
ஓதநீர்க் கடற்பரப்பை யநுமன் றாண்டல்
உயரிலங்கை நகரெரியால் வேகக் காண்டல்
பாதகரா மரக்கரெலா மிறக்கத் தாக்கல்
பாக்கியரா மாயணச் சீர்க் காதை யீதே.

ஏகவிருத்த பாரதம்.

ஐவர் நூற் றுவர்கள் தோற்ற மரக்கு மாளிகையும் வேதல்
கைவரு குதிற் றோல்வி கானகஞ் செல்லல் விராடன்
தெய்வநல் வீட்டில் வாழ்க்கை நிகழ்நிரை மீட்டல் போர்க்கு
மெய்வெளி தூது நூறு வீரர்சா வைவர் வாழ் வே.

சைவமஞ்சரிச் சிறப்புப்பாயிரம்.

பூதேவன் புகலியர்கோன் முதலறிஞர் தமிழ் நூலின் பொருள்
[களுள்ள
மீதேவன் புறமாறுவப் பதிந்தேவன் றேவனெனும் வெளிறு நீங்கி
நீதேவன் எனக்கொண்டு நிலத்தேவன் பகைகடந்து நெறிநின்றீசன்
மாதேவன்பதத்தேவன்மகிழ்பாண்டித்துரைத்தேவமன்னன்மாதோ.

மதுரைத் தமிழ்ச்சங்க அக்கிராசனபதியும் இராமநாதபுர
மஹா ராஜாதிபதியும், ஆகிய இராஜராஜேசுவர சேதுபதியவர்கள் மீது
சொல்லிய செய்யுட்கள்.

பூவரசு தொழுமரசு ராமநாதப்
புரவரசு கொடையரசு புகழ்போ யெங்குந்
தாவரசு ராசரா சேசு ரப்போர்த்
துணியரசு தமிழரசு தக்கோர் சங்கம்
மேவரசு மதுரைநகர்த் தமிழின் சங்க
மேவரசாய் வீற்றிருக்கு மேன்மை தந்த
தேவரசு நன்மாடக் கூடல் வைகுந்
திருவிளையாட் டரசபதந் சென்னி சேர்ப்பாம்.

வாழ்த்துக்கவி.

ஓதுதமிழ்ப் புலவர்சரித் திரமா மிந்நூல்
உயர்ச்சிபெற வுபகரித்த செல்வச் சீமான்
தாதுமலி தளவமலர் மாலை மார்பன்
சயவீர ராசரா சேசு ரப்போர்ச்
சேதுபதி நராபாலன் பலநூல் கற்றோன்
செய்யதமிழ் வளர்க்குமபி மான சீலன்
மாதுபதி ராமேச னருளால் வேண்டும்
வரங்களெல்லாம் பெற்றினிது வாழி மாதோ.

ஏகவிருத்த பாகவதம்.

தேவகி வயிற்றிற் கண்ணன் திருவவதாரஞ் சேரி
போய்வளர்ந் திடுதன் மாயப் பூதனை மரணம் வெற்பா

லாவினங் காத்தல் கஞ்ச னழிவு நூற் றவர்களான
மேவலர் மடிக லேவர் வீற்றிருந் துலகம் போற்றல்.

## விநோதசித்திர வினவுத்தரம் வர்ணோத்தரம்.

நாரணனார் மார்புறையும் நாயகியார் வன்மைதனக்
கோ ரெழுத்துப் பேரென்ன கோதுதெய்வப்—பேரென்னே
புள்ளுணர்த்து நாமமென்ன பொல்லாத ராவணனாற்
கொள்ளப்பட் டாளெவளோ கூறு.

உத்தரம்=சீதாதேவி.

சீ—இலக்குமி. த=வலிமை. தே—தெய்வம். வி=பறவை.
(இர. மீட். ச-அ. பார்) சீதாதேவி.

ஸ்தாலீபுலாக நியாயம்பற்றிச் சுருக்கிக்காட்டப்பட்டன.

## சாணக்கிய நீதி வெண்பா.

### பண்டிதர் மகிமை.

சொல்லணிசேர் கல்வித் துறைபோய பண்டிதர்தாம்
வெல்லுமிகல் வேந்தரினு மிக்கவர்காண்—சொல்லுங்கால்
வேந்தற்குத் தந்நாட்டின் மேன்மையுண்டாம் பண்டிதர்க்குச்
சேர்ந்தவிட மெல்லாஞ் சிறப்பு.

### திருத்தாதவன்.

சீறரவும் மூர்க்கனுந் தீங்குபுரி வாரெனினும்
சீறரவின் மூர்க்கனே தீயவன்காண்—சீறரவு
மந்திரத்தாற் கைவசமா மூர்க்கன் வசப்படுதல்
எந்தவிதத் தாலென் றியம்பு.

### நாயின் குணம்.

பேராசை யற்பம்பெறினும் பெருமகிழ்ச்சி
பேராத வீரம் பிரபுபக்தி—சோராமை
உற்றதுயில் வல்லே யுணர்ந்தெழுகை நாயினிடங்
கற்கத் தகுங்குணங்கள் காண்.

### பயங்கரம்.

வான் மருவுங் காற்றுன் மரங்களும் வச்சிரத்தான்
மாமலைக்குந் தண்பனியால் வாவியுறுந்—தாமரைக்குந்
துர்ச்சனனாற் சற்சனர்க்குந் தொல்லுலகி லெப்பொழுதும்
அச்சமுள தென்றே யறி.

வாழி

வாழி மறையாளர் வாழி பசுநிரைகள்
வாழி முகிலுடனே மன்னவர்கள்—வாழிநெறி
பூணக் கலையிலும் புண்ணியர்க டாம்வாழி
சாணக் கியநீதி சார்ந்து.

## வ. மு. இரத்திநேந்திரவரையர் இயற்றிய சில செய்யுட்கள்.

### வெண்பா.

க. துன்மதியின் மாசிமதி சொல்லுமிரு பானைந்து
தன்மப் புதன் நாள் தசமியில்;—நன்மைக்
குமார னடிசேர்ந்தான் குன்றாத சுன்னைக்
குமார சுவாமியெனக் கூறு.

உ. அன்பும் பொறையும் அகநிறைந்த வித்தையுமே
இன்பந் தருவடிவாய் எய்தினீ—துன்பகலச்
சீர்க்குமர னைப்போலச் செந்நெறியைக் காட்டுதற்கோ
பேர்க்குமார சாமியென்றார் பேசு.

### கட்டளைக் கலித்துறை.

ந. கன்னல் கசந்திட நின்னுயர் கட்டுரை கேட்டுமிக
என்னை மதிப்பவர் யாரிந்தப் பூமுகத் தீழமதில்
உன்பெயர் கூறிப்பெருவாழ்வடைந் தனனுண்மையிதால்
சுன்னைப் பதிவரு விண்மணி போன்மிளிர் தூயவனே.

ச. நற்றா யெனவே நறுந்தமிழ் போதித்த நற்குருவே
கற்றா ரிதயங் களிக்கப் பாவாங் கலையமுதம்
பற்றா யருளிய நீயிங் கெனக்குப் பரிவுடனே
சற்றாயினுமுரை செய்யாது போயதென் சாற்றுவையே;

ரு. தண்டமிழ்ப் பாநு! தமிழ்நாடு போற்றுந் தகுதிமிக்குப்
பண்டுள வாரிய பாஷா வியுற்பந பார்தி! பூ
மண்டலம் போற்று மிலங்கா புரிசெய்த மாண்தவமே!
எண்டிசை யாரும் வருந்தவிட் டேகினை என்குறையே.

சு. இலக்கண லக்கிய மாதி யியற்றமிழ் ஈண்டுகற்று
மலக்கறக் கொண்டுள போறிவால் மன்னுகன்மா[illegible]
நிலத்தியல் மேன்மை நிலவிடச் செய்தனை நீயினி[illegible]
தலத்திருந் தேயருள் பாலிக்கு வாயிந்தத் தாரணி[illegible]

முற்றிற்று.